தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—166

# கணிதம்—ஓர் அறிமுகம்-II

(புகுமுக வகுப்பிற்குரியது)

ஆசிரியர்
ரா. மகாதேவன், எம்.ஏ.,
கணிதப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி, சென்னை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

# III. கோண கணிதம்

## 1. கோணமும் கோண அளவையும்

1·1 **கோணம் :** அறிமுறை ஜியோமிதியில் கோணத்தைப் ...றிய விளக்கம் பின்வருமாறு தரப்பட்டுள்ளது. "இரண்டு கோடுகள் ஒரு புள்ளியில் சந்தித்தால் அவை கோணத்தை ...க்குகின்றன." கோண அளவையைப் பற்றி அறிமுறை ...யாமிதி ஒன்றும் கூறவில்லை.

கோண கணிதத்தில் 'கோணம்' என்பது ஓர் 'அள'வாகும் ...து 'திசை மாற்றத்தை' (Change of direction) அல்லது ...ருப்பத்தை' (Turning) அல்லது 'சுழற்சி' (Rotation)யை ...ளப்பதாகும்.

OX, OP என்பவை இரு ...ர்கோடுகளாகுக.




OX என்பது ஒரு திசை ...யும், OP என்பது மற் ...ரு திசையையும் குறிப்ப ...க் கொள்ளலாம். OX ...ம் திசையிலிருந்து OP ...ம் திசைக்குத் திரும்பும் ...து ஏற்படும் திசை மாற்றத்தை, ∠XOP எனும் கோண அளவு ...கிறது.

அல்லது, OP எனும் நேர்கோடு, முதலில் OX உடன் சேர்ந் ...ந்து, பிறகு சுழன்று படத்தில் காட்டிய நிலையில் இருப்பதாகக்

கொள்ளலாம். அப்போது கோணம் XOP, OPயின் சுழற்சியின் அளவைத் தருகிறது எனக் கொள்ளலாம்.

கோணம் XOP, சுழற்சியின் அளவை அல்லது திசைமாற்றத்தைத் தருவது என விளக்கம் தந்ததால் கோணத்தின் அளவுக்கும், அதன் புயங்களின் நீளங்களுக்கும் ஒரு தொடர்பு மில்லை எனத் தெளிவாகிறது.

1·2 **நேர்கோணமும், எதிர்கோணமும்,** (Positive and negative angles). OX என்ற திசையிலிருந்து OP எனும் ஆரம் சுழல்கிறது. சுழலும்போது, P எனும் முனை, மையம் Oவை, இடமாகச் சுற்றலாம் [ படம் (i) ]. ஒரு ஸ்குரு ஆணியை முடுக்கும் போது இடமாகச் சுழற்றுகிறோம். (Anti-clockwise rotation) இவ்வாறு இடமாகச் சுழல்வதால் ஏற்படும் கோணம் *நேர்க் கோணம் (Positive angle) எனப்படும்.




படம் (i)
நேர்கோணம்




படம் (ii)
எதிர்கோணம்

இவ்வாறன்றி, P என்ற முனை O எனும் மையத்தை வலமாகச் சுற்றலாம் (Clockwise rotation). கடிகார முட்கள் வலமாகச் சுற்றுகின்றன. இத்தகைய சுழற்சியைத் தரும் கோணங்கள் எதிர்க் கோணங்கள் (Negative angles) ஆகும் [ படம் (ii) ]. இதுவே மரபு (Convention) ஆகும்.

1·3 **கோண அளவையின் அலகு** (Unit of measure of angle) நீளம், அல்லது தூரத்தை அளக்க நீட்டல் அளவை இருப்பது போலும், நிறையை அளக்கப் பலவகை நிறுத்தல் அளவைகள்

*90° உள்ள கோணத்தைச் செங்கோணம் என்று கூறுகிறோம். நேர்க்கோணம் என்று கூறுவதில்லை.

இருப்பது போலும், 'சுழற்சியை' அல்லது திசைமாற்றத்தை அளக்கக் 'கோண அளவைகள்' உள்ளன.

கோண அளவைக்கு அலகாக ஒரு சுற்று, அதாவது, ஒரு வட்டத்தை அலகாகக் கொள்வது சாலச் சிறந்தது எனக் கருதலாம். ஆனால் ஒரு வட்டம் மிகப் பெரிது. ஆகவே 'கால் வட்டத்தை' அலகாகக் கொள்கிறோம். அதாவது சுழற்சியின் நான்கில் ஒரு பாகத்தை ஒரு 'செங்கோணம்' என்று சொல்லுகிறோம்.

**அறுபான் அளவை** (Sexagesimal system): இத்தகைய கோண அளவையில்

*1 செங்கோணத்தின் 90ல் ஒரு பாகம் 1 டிகிரி அல்லது 1 பாகை **

*1 டிகிரி அல்லது பாகையில்* 60ல் ஒரு பாகம் ஒரு மினிட்டு அல்லது கலை*

*1 மினிட்டில் அல்லது கலையில் 60ல் ஒரு பாகம் ஒரு செகண்டு அல்லது 1 விகலை*

**கோண அளவை வாய்பாடு:**

| | |
|---|---|
| 60 செகண்டு | 1 மினிட்டு |
| 60 மினிட்டு | 1 டிகிரி |
| 90 டிகிரி | 1 செங்கோணம் |

[32 டிகிரி, 42 மினிட்டு, 16 செகண்டு என்பதை $32^\circ\ 42'\ 16''$ எனக் குறிப்பது வழக்கம்.]

**பயிற்சி 1**

I. கீழ்வரும் கோண அளவுகளை டிகிரி, மினிட்டு, செகண்டுகளில் கூறுக.

(i) $42\cdot56^\circ$ (ii) $188\frac{7^\circ}{36}$ (iii) $264\frac{5^\circ}{64}$

(iv) $-32\cdot15^\circ$ (v) $-72\frac{5^\circ}{18}$.

---

* தமிழ்ப் பஞ்சாங்கக் கணிதத்தில் பாகை, கலை, விகலை எனும் சொற்கள் வழக்கத்தில் உள்ளன.

II. கீழ்வரும் கோண அளவுகளைப் பின்னமாகக் கூறு.

(i) $42^\circ\ 30'$ (ii) $142^\circ\ 24'$ (iii) $172^\circ\ 28'\ 6''$

(iv) $256^\circ\ 44'\ 15''$.

III. கீழ்வரும் கோண அளவுகளைத் தசம பின்னமாக டிகிரியில் கூறுக.

(i) $143^\circ\ 15'$ (ii) $172^\circ\ 45'$ (iii) $51^\circ\ 30'\ 45''$

(iv) − 3[illegible]° 30′ 30″ (v) $-324^\circ\ 15'\ 30''$

1·4 **வட்ட அளவை** (Circular measure): உயர் கணிதத்தில் அறுபான் அளவையைப் பயன்படுத்துவது எளிதன்று. ஆங்குப் பயன்படும் அளவை, வட்ட அளவை (Circular measure) ஆகும். இதில் கோண அளவையின் அலகு 'ரேடியன்' (Radian) எனப்படும்.

**ரேடியன் :** OXலிருந்து OP எனும் ஆரம் சுழல்கிறது. OP=OX எனக் கொள்வோம். அப்போது Pயின் பாதை XP எனும் வட்ட வில்லாகும். வட்ட வில் XPன் நீளம் ஆரம் OXக்குச் சமம் ஆகுக.




அப்போது கோணம் XOPயின் அளவு ஒரு ரேடியன் எனப்படும்.

ஆகவே ஒரு வட்டத்தின் ஆரம் நீளமுள்ள ஒரு வட்ட வில்லால், அந்த வட்ட மையத்தில் தாங்கப்படும் கோணம் ஒரு ரேடியன் எனப்படும். இதுவே ரேடியன் என்ற கோண அலகின் விளக்கம் (Definition) ஆகும்.

**ரேடியனும் டிகிரியும் :** ஒரு ரேடியன் அறுபான் அளவையில் எத்தனை டிகிரி என்பதைப் பார்ப்போம்.
வட்டத்தின் விட்டம் XOX′ ஆகுக.

$\angle XOP$ = ஒரு ரேடியன் ஆகுக.

$\angle XOX' = 180^\circ$

வட்டவில் XPயின் நீளம் = வட்டத்தின் ஆரம் OX = $r$ ஆகுக.

ஒரு வட்டத்தில் சம நீளம் உள்ள விற்கள் வட்ட மையத்தில் சம கோணங்களைத் தாங்குகின்றன என்பது அறிமுறை ஜியோமிதியில் ஒரு தேற்றமாகும்.




ஆகவே வில்களால் மையத்தில் தாங்கும் கோணங்களும், வில்களின் நீளங்களும் நேர் விகிதப் பொருத்தத்தில் இருப்பன ஆகும்.

$$\text{ஆகவே } \frac{\text{கோணம் XOX}'}{\text{வில் XPX}'} = \frac{\text{கோணம் XOP}}{\text{வில் XP}}$$

ஆனால், வில் XPX' = அரை வட்டம்

$= \pi r$

$$\therefore \frac{180^\circ}{\pi r} = \frac{\text{ஒரு ரேடியன்}}{r}$$

$$\therefore \text{ ஒரு ரேடியன்} = \frac{180}{\pi} \text{ டிகிரி.}$$

**குறிப்பு** 1 : இதிலிருந்து நாம் காண்பது ரேடியனின் மதிப்பு, வட்ட ஆரத்தின் நீளத்தைப் பொருத்ததன்று.

2. **$\pi$ ரேடியன் = 180 டிகிரிகள்**

[ $\pi = 180$ எனக் கூறலாகாது ].

3. $x$ ரேடியன் $= \frac{180}{\pi} x$ டிகிரிகள்

4. D டிகிரி $= \frac{\pi}{180}$ D ரேடியன்

**மாதிரி 1.** கீழ் வரும் கோணங்களை வட்ட அளவைக்கு மாற்றுக.

(i) $45^\circ$ (ii) $120^\circ$ (iii) $52^\circ\ 30'$

(i) 180 டிகிரி = $\pi$ ரேடியன்

$$\therefore 45 \text{ டிகிரி} = \frac{\pi}{180} \times 45 = \frac{\pi}{4} \text{ ரேடியன்}$$

(ii) 180 டிகிரி $= \pi$ ரேடியன்

$\therefore$ 120 டிகிரி $= \frac{\pi}{180} \times 120 = \frac{2}{3}\pi$ ரேடியன்

(iii) $52^\circ\ 30'$ டிகிரி $= \frac{\pi}{180} \times 52 \cdot 5^\circ$

$= \frac{\pi}{180} \times \frac{105}{2} = \frac{7}{24}\pi$ ரேடியன்

[**குறிப்பு:** ரேடியனில் கோணத்தைச் சொல்லும்போது $\pi$க்கு மதிப்பிட வேண்டியதில்லை].

**மாதிரி 2.** ஒரு ரேடியனின் மதிப்பை 'மினிட்டில்' கூறுக. ($\pi = 3 \cdot 1416$ எனக் கொள்க).

$\pi$ ரேடியன் $= 180$ டிகிரி $= 180 \times 60$ மினிட்

1 ரேடியன் $= \frac{180 \times 60}{\pi}$

$= \frac{10800}{3 \cdot 1416}$

$=$ 3438 மினிட்.

**குறிப்பு:** 1 ரேடியன் $=$ 3438 மினிட் (மினிட் சுத்தமாக) இவ்வாறே $\pi = 3 \cdot 14159$ என இன்னும் திருத்தமான மதிப்பிட்டுக் கணக்கிட, 1 ரேடியன் $=$ 206265 செகண்டு என வரும்.

**பட்டியல்:** (Tables) வட்ட அளவைக்கு ஏற்ற அறுபான் அளவை, பட்டியல்களில் தரப்பட்டுள்ளன. இதைப் 'பட்டியல் தொகுப்பு'க்களில் (Clarkes Tables போன்றவை) காணலாம்

1·5 **சதாம்ச முறை** (Centesimal system): இம்முறையில்

1 செங்கோணம் $=$ 100 கிரேடுகள் (grades) $= 100^g$

1 கிரேடு $=$ 100 மினிட்டு $= 100'$

1 மினிட்டு $=$ 100 செகண்டு $= 100''$.

இது பிரஞ்சுப் புரட்சிக்குப் பிறகு, மற்ற அளவைகளுக்கு தசாம்ச முறை ஏற்படுத்தப்பட்ட பொழுது, கோண அளவைக்கும், அத்தகைய முறை போன்று இந்த அலகு ஏற்பட்டது. ஆனால் நடைமுறையில் யாரும் இந்த அலகைக் கையாளுவதில்லை.

## பயிற்சி 2

1. வட்ட அளவையில் $\pi$ன் பின்னமாகக் கோணங்களைக் கூறுக.

(i) 60° (ii) 45° (iii) 30° (iv) 120° (v) 150°
(vi) $7\frac{1}{2}$° (vii) 225° (viii) 54° (ix) 24° 36′
(x) 270° (xi) 360° (xii) 480°.

2. டிகிரியில் கூறுக. கோணங்கள் ரேடியனில் தரப்பட்டுள்ளன.

(i) $\frac{\pi}{4}$ (ii) $\frac{\pi}{3}$ (iii) $\frac{3\pi}{4}$ (iv) $\frac{7\pi}{3}$ (v) $2\pi$

(vi) $\frac{5\pi}{2}$ (vii) 1·21 (viii) ·022 (ix) ·001

3. கீழ்வரும் கோணங்களை 4 தசமத்தானத் திருத்தமாக ரேடியனில் கூறுக. (ரேடியன் = 3431 மினிட் எனக் கொள்க).

(i) 1·18° (ii) 3° 24′ (iii) 45° 18′ (iv) 2° 18′
(பட்டியலில் சரி பார்க்கவும்).

4. ஒரு கோணத்தின் மதிப்பு '$m$' மினிட்டு அல்லது '$r$' ரேடியன் என்றால் $m : r$ எனும் விகிதம் என்ன?

5. ஒரு சக்கரம் ஒரு நிமிடத்தில் '$n$' தடவை சுற்றுகிறது என்றால் 1 செகண்டில் அதன் சுழற்சியை ரேடியனில் கூறுக.

# 2. குறுங்கோணங்களின் கோணவிகிதங்கள்
## (Trigonometric Ratios of acute angles)

2·1 **வடிவொத்த உருவங்கள் (Similar figures):** நாற்கரம், இணைகரம், முக்கோணம், எனும் வடிவிலுள்ள நிலப்பரப்பிற்கும், வயல்களுக்கும், கிடைப் படம் அளவுத் திட்டத்திற்கு (to scales) வரைந்திருக்கிறீர்கள்.

ஒரு குறிப்பிட்ட வயலுக்குப் பல்வேறு அளவுத் திட்டங்களுக்குக் கிடைப்படங்கள் வரையலாம். ஆனால் படங்கள் யாவும் வயலின் வடிவத்தை ஒத்தவை என்று நீங்கள் அறிவீர்கள். இத்தகைய கிடைப்படங்களில், (*i*) ஒத்த கோணங்கள் (corresponding angles) சமமாக இருக்கும். (*ii*) ஒத்த பக்கங்கள் (corresponding sides) ஒரே விகிதத்தில் இருக்கும். அப்போது மட்டுமே உருவங்கள் வடிவொத்தவையாக இருக்கும்.

அறிமுறை ஜியோமிதியில் நாம் காண்பது என்னவெனில், முக்கோணங்களில் ஒன்றன் கோணங்கள் முறையே மற்றதன் கோணங்களுக்குச் சமமானால், ஒத்த பக்கங்களின் விகிதம் சமமாயிருக்கும் என்பதாம்.

2·2 **குறுங்கோணங்களின் கோண விகிதங்கள்:** ஒரு செங்கோண முக்கோணத்தின், ஒரு கோணத்தின் அளவுதரப்பட்டால், பல செங்கோணமுக்கோணங்கள் வரைய முடியும். கோணத்தின் அளவு $\theta$ ஆகுக. ($\theta$ என்பதைத் 'தீடா' என உச்சரிக்கவும். இது கிரேக்கமொழியின் ஓர் எழுத்தாகும்.) பல முக்கோணங்களில் ஒன்றாகிய ABC என்ற முக்கோணத்தில் $\angle A = \theta°$ $\angle C = 90°$ ஆகுக.




**சில விளக்கங்கள்** (Certain defenitions):

AC என்னும் பக்கம் θ என்னும் கோணத்தின் **அடுத்த பக்கம்** (adjacent side)

BC என்னும் பக்கம் θ என்னும் கோணத்தின் **எதிர்ப்பக்கம்** (opposite side) எனப்படும்.

AB எனும் பக்கம் செங்கோணத்தின் **கர்ணம்** (hypotenuse) எனப்படும்.

2·3 **கோணவிகிதங்களின் விளக்கம்:** முக்கோணத்தில் 'θ' எனும் கோணத்திற்கு $\frac{\text{எதிர்ப்பக்கம்}}{\text{கர்ணம்}}$ $\left(\text{அதாவது } \frac{BC}{AB}\right)$ எனும் விகிதம், θவின் **சைன் விகிதம்** (sine ratio) எனப்படும். அதை Sin θ எனக் குறிப்போம்.

$\frac{\text{அடுத்தபக்கம்}}{\text{கர்ணம்}}$ எனும் விகிதம் θவின் **கோசைன் விகிதம்** (cosine ratio) எனப்படும். அதை cos θ எனக் குறிப்போம்.

$\frac{\text{எதிர்ப்பக்கம்}}{\text{அடுத்த பக்கம்}}$ எனும் விகிதம் θவின் டான்ஜண்டு **விகிதம்** (tangent ratio) எனப்படும். அதை tan θ எனக் குறிப்போம். ஆகவே, செங்கோண முக்கோணம் ABCயில் (A = θ, C = 90° இருக்கும்போது)

$$\sin\theta = \frac{\text{எதிர்ப்பக்கம்}}{\text{கர்ணம்}} = \frac{BC}{AB}$$

$$\cos\theta = \frac{\text{அடுத்தபக்கம்}}{\text{கர்ணம்}} = \frac{AC}{AB}$$

$$\tan\theta = \frac{\text{எதிர்ப்பக்கம்}}{\text{அடுத்தபக்கம்}} = \frac{BC}{AC}$$

இவை மூன்றும் முக்கியக் கோண விகிதங்களாகும். இவைகளின் தலைகீழ் விகிதங்களாகிய மூன்று விகிதங்களுக்கும் தனிப்பெயர்கள் உள்ளன.

கோசீகண்டு $\theta = \frac{1}{\text{சைன் } \theta}$ அதாவது $\operatorname{cosec}\theta = \frac{1}{\sin\theta}$

சீகண்டு $\theta = \frac{1}{\text{காஸ் } \theta}$ அதாவது $\sec\theta = \frac{1}{\cos\theta}$

கோடான்ஜண்டு $\theta = \frac{1}{\text{டான் } \theta}$ அதாவது $\cot\theta = \frac{1}{\tan\theta}$

**குறிப்பு 1:** $\theta$ என்ற அளவுள்ள கோணத்தையுடைய பல செங்கோண முக்கோணங்கள் வரையலாம் என்றும் அவற்றுள் ABC என்பது ஒரு முக்கோணம் என்றும் கூறினோம்.



ABC, PQR XYZ என்பவை இத்தகைய செங்கோண முக்கோணங்கள். இவற்றுள்

$$\angle A = \angle P = \angle X = \theta$$

$$\angle C = \angle R = \angle Z = 90^\circ$$

ஆகவே, இவை வடிவொத்த முக்கோணங்கள்

$$\therefore \frac{BC}{AB} = \frac{QR}{PQ} = \frac{YZ}{XY} = \frac{\theta\text{வின் எதிர்ப்பக்கம்}}{\text{கர்ணம்}} = \sin\theta$$

எல்லா முக்கோணங்களிலும் θவின் சைன் விகிதம் சமமாக இருப்பதைக் காண்கிறோம்.







ஆகவே கோணவிகிதங்கள், கோணத்தைப் பொருத்ததே யன்றிப் பக்கங்களைப் பொருத்தவையல்ல.

ஒரு கோணத்திற்கு என ஒரு சைன் விகிதம்தான் உள்ளது. இதுபோன்றே மற்ற கோணவிகிதங்களும் இருக்கும்.

**குறிப்பு 2 :** கோணங்களை டிகிரிகளிலோ அல்லது ரேடியனிலோ அளக்கிறோம். ஆனால், கோணவிகிதங்கள் வெற்று எண் (mere numbers) – அளவையல்ல – என்பது கவனிக்கத்தக்கது.

**குடுப்பு 3 :** மேலே தரப்பட்டுள்ள கோணவிகிதங்களின் விளக்கங்கள் (definition) குறுங்கோணங்களுக்கு மட்டும் பொருந்தும் என்பதை வற்புறுத்துகிறோம். பொதுவாக எத்தகைய கோணத்தின் விகிதங்கள் எவையாக இருக்கும் என்பதைப் பின்னர் பார்க்கலாம்.

**குறிப்பு 4:** ஒரு செங்கோண முக்கோணத்தின் எதிர்ப் பக்கமும், அடுத்தபக்கமும், கர்ணத்தைவிடச் சிறியனவாதலால், கோணங்களின் சைன், கோசைன் விகிதங்களின் மதிப்பு 1ஐ விடக் குறைவான தகுபின்னங்களாகும் (Proper fraction).

**குறிப்பு 5:** கோணத்தின் சைன், கோசைன் விகித விளக்கங்களிலிருந்து தெரிவது

எதிர்ப்பக்கம் $=$ கர்ணம் $\times \sin\theta$

அடுத்த பக்கம் $=$ கர்ணம் $\times \cos\theta$

அதாவது $BC = AC \sin\theta$

$AB = AC \cos\theta$

இவ்வாறு உடனே எழுதப் பழகுவது பின்னர் பயனளிக்கும்.

**பயிற்சி 3 (வாய்மொழி)**

**(விடையளிக்கக் கீழ்க்காணும் படத்தைப் பயன்படுத்துக.)**




படத்தில் $QM \perp OM$; $PL \perp OL$, $QP \perp OP$, $PN \perp MQ$

1. படத்தில் உள்ள எழுத்துக்களைப் பயன்படுத்தி அதில் காணும் செங்கோண முக்கோணங்களைக் கூறுக.

2. கீழ் வரும் கோணவிகிதங்களைக் கூறுக.

[மாதிரி: $\tan PQN = \dfrac{PN}{NQ}$]

*(i)* sin POL *(ii)* sin POQ *(iii)* sin QOM *(iv)* cos POL
*(v)* cos POQ *(vi)* cos MOQ *(vii)* sin NPQ *(iiiv)* cos NQP
*(ix)* tan LOP *(x)* cos OQP *(xi)* cos POQ *(xii)* tan MOQ

3. கீழ் வரும் விகிதங்களை சைன், கோசைன், டான்ஜண்டு விகிதங்களுள் ஒன்றில் கூறுக.

[மாதிரி: $\frac{OM}{OQ} = \cos MOQ$ அல்லது $\sin OQM$.]

(i) $\frac{MQ}{OQ}$ (ii) $\frac{LP}{OP}$ (iii) $\frac{PL}{OL}$ (iv) $\frac{NP}{QP}$ (v) $\frac{QP}{OP}$

(vi) $\frac{QP}{OQ}$ (vii) $\frac{NQ}{PQ}$ (viii) $\frac{QN}{NP}$ (ix) $\frac{QM}{OQ}$ (x) $\frac{OP}{OQ}$

4. காலியான இடத்தைத் தக்க கோண விகிதத்தால் நிரப்புக.

[மாதிரி: $OM = QO \times \cos QOM$ அல்லது $QO \times \sin OQM$].

(i) $LP = OL \times$ ______ (ii) $PN = PQ \times$ ______

(iii) $PQ = OP \times$ ______ (iv) $QM = OQ \times$ ______

(v) $QN = PQ \times$ ______ (vi) $OP = OQ \times$ ______

(vii) $PN = NQ \times$ ______ (viii) $LP = OP \times$ ______

(ix) $PQ = OP \times$ ______ (x) $OL = OP \times$ ______

## பயிற்சி 4

கீழ்வரும் பக்கங்களையுடைய செங்கோண முக்கோணங்களுக்குத் துணைப்படம் வரைந்து மிகச் சிறிய கோணத்தை '$x$' எனக் குறிக்கவும். ஒவ்வொரு படத்திலிருந்தும் $x$ன் சைன், கோசைன், டான்ஜண்டு விகிதங்களை முறையே எழுதுக.

(i) 3, 4, 5 (ii) 20, 21, 19 (iii) 11, 60, 67

(iv) 9, 40, 41 (v) 8, 6, 10 (vi) 12, 5, 13

(vii) 1, $\sqrt{3}$, 2 (viii) 35, 12, 37 (ix) 8, 15, 17.

ஒரு கோணத்தின், ஒரு கோண விகிதம் தரப்பட மற்றக் கோண விகிதங்களைக் காணும் முறை.

மாதிரி: $\sin x^\circ = \frac{3}{5}$ என்றால் $\cos x^\circ$, $\tan x^\circ$ன் மதிப்பைக் கண்டுபிடி.

$\sin x^\circ = \frac{\text{எதிர்ப்பக்கம்}}{\text{கர்ணம்}} = \frac{3}{5}$ ஆனதால், கர்ணம் 5 அலகுள்ளதும், ஒரு பக்கம் 3 அலகுள்ளதுமான ஒரு செங்கோண முக்கோணம் துணைப்படமாக வரைக. ABC என்ற துணைப்




படத்தில் AB, கர்ணம் = 5, BC = 3 என்றால் $\underline{|A}$ = $x^\circ$; AC = 4 (பிதகோரஸ் தேற்றப் படி) படத்திலிருந்து $\cos x^\circ = \frac{4}{5}$, $\tan x^\circ = \frac{3}{4}$ எனக் காண்கிறோம்.

[குறிப்பு: ஒரு கோண விகிதம் தருவது, ஒரு செங்கோண முக்கோணத்தின் இரண்டு பக்கங்களைத் தருவதற்கு ஒப்பாகும். துணைப் படம் வரைந்து மூன்றாவது பக்கத்தைப் பிதகோரஸ் தேற்றத்தைப் பயன்படுத்திக் காணவும். மற்றக் கோண விகிதங்களைப் படத்திலிருந்து எழுதவும்.]

### பயிற்சி 5

1. $\sin A = \frac{5}{12}$ என்றால் $\cos A$, $\tan A$ காண்க.
2. $\cos x = \frac{3}{8}$ என்றால் $\tan x$, $\sec x$ காண்க.
3. $\tan \theta = \frac{15}{8}$ என்றால் $\operatorname{cosec} x$, $\cos x$ காண்க.
4. $\sec A = \frac{29}{20}$ என்றால் $\sin A$, $\tan A$, காண்க.
5. $\tan x = \frac{35}{12}$ என்றால் $\sin x$, $\sec x$ காண்க.
6. $\operatorname{cosec} x = \frac{29}{21}$ என்றால் $\sec x$, $\tan x$ காண்க.
7. $\cos B = \frac{\sqrt{3}}{2}$ என்றால் $\tan B$, $\operatorname{cosec} B$ காண்க.
8. $\sec A = \frac{7}{4}$ என்றால் $\sin A$, $\tan A$ காண்க.
9. $\tan A = \frac{a}{b}$ என்றால் $\sin A$, $\cos A$ காண்க.
10. $\sin A = \frac{2mn}{m^2+n^2}$ என்றால் $\tan A$, $\sec A$ காண்க.

# 3. ஒரு கோணத்தின் கோண விகிதங்களிடையே உள்ள சில முக்கிய தொடர்புகள்

3·1 ஏனைய கோண விகிதங்களை சைன், கோசைன் விகிதங்களில் கூறமுடியும்.




படத்தில் $\angle A = \theta; \quad \angle C = 90°$

$$\sin\theta = \frac{BC}{AB}; \qquad \cos\theta = \frac{AC}{AB}$$

$$\therefore \frac{\sin\theta}{\cos\theta} = \frac{BC}{AB} \div \frac{AC}{AB} = \frac{BC}{AC} = \tan\theta$$

$$\therefore \boxed{\tan\theta = \frac{\sin\theta}{\cos\theta}}$$

2. $\cot\theta = \dfrac{1}{\tan\theta} =$

$$\therefore \boxed{\cot\theta = \frac{\cos\theta}{\sin\theta}}$$

3. ஏற்கெனவே, $\operatorname{cosec}\theta = \frac{1}{\sin\theta}$, $\sec\theta = \frac{1}{\cos\theta}$ என்று கூறியுள்ளோம்.

இவ்வாறு ஒரு கோணத்தின் சைன், கோசைன் விகிதங்களில் ஏனைய நான்கு கோண விகிதங்களைக் கூறமுடிகிறது.

**பயிற்சி 6 (வாய்மொழி)**

A எனும் கோணத்தின் சைன், கோசைன் விகிதங்கள் தரப் பட்டுள்ளன; tan A, cot A விகிதங்கள் கூறுக.

(i) $\left(\frac{3}{5}, \frac{4}{5}\right)$ (ii) $\left(\frac{12}{13}, \frac{5}{13}\right)$ (iii) $\left(\frac{8}{17}, \frac{15}{17}\right)$

(iv) $\left(\frac{1}{\sqrt{2}}, \frac{1}{\sqrt{2}}\right)$ (v) $\left(\frac{1}{2}, \frac{\sqrt{3}}{2}\right)$ (vi) $\left(\frac{40}{41}, \frac{49}{41}\right)$

(vii) $\left(\frac{\sqrt{5}}{3}, \frac{2}{3}\right)$ (viii) $\left(\frac{2\sqrt{2}}{3}, \frac{1}{3}\right)$ (ix) $\left(\frac{\sqrt{7}}{4}, \frac{3}{4}\right)$

(x) $\left(\frac{8}{17}, \frac{15}{17}\right)$

**3·2 ஒரு கோணத்தின் சைன், கோசைன் விகிதங்களிடையேயுள்ள தொடர்பு.** $\sin^2\theta + \cos^2\theta = 1$ **எனக் காட்ட.**




ABC என்ற செங்கோண முக்கோணத்தில் $\angle C = 90°$ $\angle A = \theta$ ஆகுக.

$$\sin\theta = \frac{BC}{AB} \qquad \therefore \sin^2\theta = \frac{BC^2}{AB^2}$$

$$\cos\theta = \frac{AC}{AB} \qquad \therefore \cos^2\theta = \frac{AC^2}{AB^2}$$

$$\therefore \quad \sin^2\theta + \cos^2\theta = \frac{BC^2 + AC^2}{AB^2}$$

ஆனல் பிதகோரஸ் தேற்றப்படி

$$BC^2 + AC^2 = AB^2$$

$$\sin^2\theta + \cos^2\theta = \frac{AB^2}{AB^2} = 1$$

$$\therefore \quad \boxed{\sin^2\theta + \cos^2\theta = 1}$$

**குறிப்பு 1 :** கோண விகிதங்களின் அடுக்குகளாகிய $(\sin\theta)^2$, $(\cos\theta)^2$, $(\tan\theta)^2$ என்பனவற்றை முறையே $\sin^2\theta$, $\cos^2\theta$, $\tan^2\theta$ எனக் குறிப்பது வழக்கம்.

**குறிப்பு : 2** மேற்கூறிய தொடர்பு மிகவும் முக்கியமானது. ஒரு கோணத்தின் சைன் விகிதத்தின் வர்க்கமும், கோசைன் விகிதத்தின் வர்க்கமும் சேர்ந்து 1 என மதிப்புடையதாகும். அதாவது

$$\sin^2 x + \cos^2 x = 1; \quad \sin^2 A + \cos^2 A = 1$$

$$\sin^2 3A + \cos^2 3A = 1; \quad \sin^2\frac{A}{2} + \cos^2\frac{A}{2} = 1.$$

3·3 $\sec^2\theta = 1 + \tan^2\theta$; $\operatorname{cosec}^2\theta = 1 + \cot^2\theta$ எனக்காட்ட.

அதே படத்தில்

$$\sec\theta = \frac{AB}{AC}$$

$$\sec^2\theta = \frac{AB^2}{AC^2} = \frac{AC^2 + BC^2}{AC^2} = 1 + \frac{BC^2}{AC^2} = 1 + \tan^2\theta$$

$$\therefore \quad \mathbf{\sec^2\theta = 1 + \tan^2\theta}$$

$$(iii) \quad \operatorname{cosec}\theta = \frac{AB}{BC}$$

$$\therefore \quad \operatorname{cosec}^2\theta = \frac{AB^2}{BC^2}$$

$$= \frac{AC^2 + BC^2}{BC^2}$$

$$= \frac{AC^2}{BC^2} + 1 = \cot^2\theta + 1$$

$\therefore$ **$\operatorname{cosec}^2\theta = 1 + \cot^2\theta$**

**பயிற்சி 7** *(வாய்மொழி)*

சுருக்குக :

1. $\sin^2 A + \cos^2 A$
2. $\cos^2\theta + \sin^2\theta$
3. $\cos^2 2A + \sin^2 2A$
4. $\sin^2\frac{A}{2} + \cos^2\frac{A}{2}$
5. $1 - \sin^2\theta$
6. $1 - \cos^2\theta$
7. $\sin^2 A + 1 + \cos^2 A$
8. $(\sin^2 A + \cos^2 A) \times (\sin^2 B + \cos^2 B)$
9. $\sin^2 x + \cos^2 x + \cos^2 y + \sin^2 y$
10. $1 - \sin^2 B - \cos^2 B$
11. $2\cos^2 A + 2\sin^2 A$
12. $\cos^2 A \sin^2 B + \sin^2 A \sin^2 B$
13. $\sec^2 A - 1$
14. $\operatorname{cosec}^2\theta - 1$
15. $\sec^2 A - \tan^2 A$
16. $\tan^2 B - \sec^2 B$
17. $\tan^2 A + 1 - \sec^2 A$
18. $\cot^2 A + 1 - \operatorname{cosec}^2 A$
19. $\operatorname{cosec}^2 B - \cot^2 B$
20. $(\sec^2 A - \tan^2 A) \times (\operatorname{cosec}^2 B - \cot^2 B)$

## 3·4 சில முற்றொருமைகள் [ Certain Identities ] :

**மாதிரி :** $\sin^6 A + \cos^6 A = 1 - 3\sin^2 A\cos^2 A$ எனக்காட்டு :

$\sin A = s$ எனவும் $\cos A = c$ எனவும் கொள்க.

$\therefore\ s^2 + c^2 = 1$

$$\sin^6 A + \cos^6 A = (s^6 + c^6)$$

$$= (s^2 + c^2)^3 - 3s^2c^2(s^2 + c^2)$$

$$= 1 - 3s^2c^2\ [\because s^2 + c^2 = 1]$$

$$= 1 - 3\sin^2 A\cos^2 A.$$

குறிப்பு: ஒரே கோணத்தின் சைன் கோசைன் விகிதங்கள் அடங்கிய முற்றொருமையை நிறுவ சைன் விகிதத்தை ‘$s$’, எனவும் கோசைன் விகிதத்தை ‘$c$’ எனவும் கொள்க. அப்போது $s^2 + c^2 = 1$ என்றால் முற்றொருமையை நிறுவுவதல் அல்ஜீப்ரா கணக்காக மாறும். கடினமான கணக்குகளில் மட்டும் இவ்வாறு பிரதியிடல் நலம்.

மாதிரி 1. $(\cos \alpha + \sin \alpha)^2 = 1 + 2\cos\alpha \sin\alpha$ எனக் காட்டு.

$$(\cos\alpha + \sin\alpha)^2 = \cos^2\alpha + \sin^2\alpha + 2\cos\alpha\sin\alpha$$
$$= 1 + 2\cos\alpha\sin\alpha \quad [\because \cos^2\alpha + \sin^2\alpha = 1]$$

மாதிரி 2. $(\tan A + \cot A)^2 = \sec^2 A + \text{cosec}^2 A$ எனக் காட்டு.

$$(\tan A + \cot A)^2 = \tan^2 A + \cot^2 A + 2\tan A \cot A$$
$$= (\sec^2 A - 1) + (\text{cosec}^2 A - 1) + 2\tan A \times \frac{1}{\tan A}$$
$$= \sec^2 A + \text{cosec}^2 A - 2 + 2$$
$$= \sec^2 A + \text{cesec}^2 A$$

மாதிரி 3. $3(\sin x - \cos x)^4 + 6(\sin x + \cos x)^2 + 4(\sin^6 x + \cos^6 x) = 13$ எனக் காட்டுக.

இங்கு $\sin x = s$ எனவும் $\cos x = c$ எனவும் பிரதியிட

$s^2 + c^2 = 1$ என்றால்

$3(s-c)^4 + 6(s+c)^2 + 4(s^6 + c^6) = 13$
எனக் காட்ட வேண்டும்.

ஒவ்வொரு உறுப்பாக எடுப்போம்.

$$(s-c)^4 = [(s-c)^2]^2$$
$$(s-c)^2 = s^2 + c^2 - 2sc = 1 - 2sc$$
$$\therefore (s-c)^4 = (1-2sc)^2 = 1 - 4sc + 4s^2c^2$$
$$\therefore 3(s-c)^4 = 3 - 12sc + 12s^2c^2$$

$$6(s+c)^2 = 6[s^2 + c^2 + 2sc]$$
$$= 6[1 + 2sc]$$
$$= 6 + 12sc$$
$$s^6 + c^6 = (s^2+c^2)^3 - 3s^2c^2(s^2+c^2)$$
$$= 1 - 3s^2c^2$$

$\therefore\quad 4(s^6+c^6) = 4 - 12s^2c^2$

$\therefore\quad 3(s-c)^4 + 6(s+c)^2 + 4(s^6+c^6) = 13$

$\therefore\quad 3(\sin x - \cos x)^4 + 6(\sin x + \cos x)^2 + 4(\sin^6 x + \cos^6 x) = 13$

மாதிரி: $(1 + \cot A - \operatorname{cosec} A)\ (1 + \tan A + \sec A) = 2$ எனக் காட்டு.

$\sin A = s$ எனவும், $\cos A = c$ எனவும் பிரதியிட

$$\text{இடது பக்கம்} = \left(1 + \frac{c}{s} - \frac{1}{s}\right)\left(1 + \frac{s}{c} + \frac{1}{c}\right)$$

$$= \left(\frac{s+c-1}{s}\right)\left(\frac{c+s+1}{c}\right)$$

$$= \frac{(s+c)^2-1}{sc} = \frac{s^2+c^2+2cs-1}{sc}$$

$$= \frac{1+2sc-1}{sc} = \frac{2sc}{sc} = 2$$

## பயிற்சி 8

### A

(எளிய கணக்குகள்)

கீழ்க்காணும் முற்றொருமைகளை நிறுவுக:

1. $\cot A\ \sec A = \operatorname{cosec} A$
2. $\cot A\ \sin A = \cos A$
3. $\sin A\ \sec A = \tan A$
4. $\cos A \cdot \operatorname{cosec} A = \cot A$
5. $(\cos B + \sin B)^2 = 1 + 2\cos B\ \sin B$
6. $(\cos\theta - \sin\theta)^2 = 1 - 2\cos\theta\ \sin\theta$
7. $\cos^4 A - \sin^4 A = 1 - 2\sin^2 A$
8. $\cos^4 A + \sin^4 A = 1 - 2\sin^2 A\cos^2 A$
9. $\dfrac{1}{\sec^2 A} + \dfrac{1}{\operatorname{cosec}^2 A} = 1$
10. $\dfrac{\operatorname{cosec} A}{\sin A} - \dfrac{\text{co} + A}{\tan A} = 1$

11. $\dfrac{1-\tan^2 A}{1+\tan^2 A} = \cos^2 A - \sin^2 A$

12. $(\tan\theta + \cot\theta)^2 = \sec^2\theta + \operatorname{cosec}^2\theta$

13. $\dfrac{\cos^3\theta + \sin^3\theta}{\cos\theta + \sin\theta} + \dfrac{\cos^3\theta - \sin^3\theta}{\cos\theta - \sin\theta} = 2$

14. $\sec^2 A + \operatorname{cosec}^2 A = \sec^2 A \cdot \operatorname{cosec}^2 A$

15. $\sin^6\theta + \cos^6\theta = 1 + 3\sin^2\theta\cos\theta$

## B

### கடின கணக்குகள்

16. $\dfrac{\sin\theta}{1+\cos\theta} + \dfrac{1+\cos\theta}{\sin\theta} - \dfrac{2}{\sin\theta} = 0$

17. $\dfrac{\sin\theta - 2\sin^3\theta}{2\cos^3\theta - \cos\theta} = \tan\theta$

18. $3(\sin x+\cos x)^4 + 6(\sin x - \cos x)^2 + 4(\sin^6 x + \cos^6 x) = 13$

19. $\dfrac{\sec A + \tan A}{\operatorname{cosec} A + \cot A} - \dfrac{\sec A - \tan A}{\operatorname{cosec} A - \cot A} = 2(\sec A - \operatorname{cosec} A)$

20. $\dfrac{1+\cos A - \sin A}{1+\sin A + \cos A} + \dfrac{1+\sin A + \cos A}{1+\cos A - \sin A} = 2\sec A$

21. $\dfrac{2\cos A\sin A + \cos A}{1 + \sin A + \sin^2 A - \cos^4 A} = \cot A$

22. $\cos A(1-\cot A) - \sin A(1-\tan A) = \sec A - \operatorname{cosec} A$

23. $(1+\tan x + \sec x)(1 + \tan x - \sec x) = 2\tan x$

24. $\sec^6 A - \tan^6 A = 1 + 3\sec^2 A\tan^2 A$

25. $(\sec A - \tan A - 1)(\sec A + \tan A + 1) + 2\tan A = 0$

**$45^\circ$ இன் கோண விகிதங்கள் :**




ABC என்ற முக்கோணத்தில் $\angle A = 45^\circ$ $\angle C = 90^\circ$ ஆகுக.

$\therefore$ $\angle B = 45^\circ$ $\therefore$ ABC இரு சமபக்க முக்கோணமாகும்.

$AC = x$ என்றால் $BC = x$

$AB^2 = AC^2 + BC^2 = 2x^2$

$AB = \sqrt{2x}$

$$\therefore \sin 45^\circ = \frac{BC}{AB} = \frac{x}{\sqrt{2x}} = \frac{1}{\sqrt{2}}$$

$$\cos 45^\circ = \frac{AC}{AB} = \frac{x}{\sqrt{2x}} = \frac{1}{\sqrt{2}}$$

$$\text{ton } 45^\circ = \frac{BC}{AC} = \frac{x}{x} = 1$$

**$60^\circ$, $30^\circ$ கோணங்களின் விகிதங்கள் :** ABC என்ற முக்கோணத்தில் $\angle C = 90^\circ$ $\angle A = 60^\circ$ ஆகுக.

$\therefore$ $\angle B = 30^\circ$; ACஐ Dக்கு CD = AC எனும்படிக்கு நீட்டு. BDஐச் சேர். ABC, DBC எனும் முக்கோணங்களில் AC = CD, BC பொது, ACB = DCB = $90^\circ$ $\triangle ACB \equiv \triangle DCB$

$\therefore$ $\angle CDB = \angle CAB = 60^\circ$




$\therefore$ ABD ஒரு சமபக்க முக்கோணம்

$AB = BD = AD = 2AC$

$AC = x$ என்றால் $AB = 2x$ ; $\therefore \quad BC^2 = AB^2 - BC^2$

$$= 4x^2 - x^2$$

$$= 3x^2$$

$$BC = \sqrt{3}\,x$$

$$\therefore \quad AB : BC : CA = 2 : \sqrt{3} : 1$$

$$\therefore \quad \sin 60^\circ = \frac{BC}{AB} = \frac{\sqrt{3}}{2}$$

$$\cos 60^\circ = \frac{AC}{AB} = \frac{1}{2}$$

$$\tan 60^\circ = \frac{BC}{AC} = \sqrt{3}$$

$$\sin 30^\circ = \frac{AC}{AB} = \frac{1}{2}$$

$$\cos 30^\circ = \frac{BC}{AB} = \frac{\sqrt{3}}{2}$$

$$\tan 30^\circ = \frac{AC}{BC} = \frac{1}{\sqrt{3}}$$

[குறிப்பு: $60^\circ$, $30^\circ$ கோணங்களின் விகிதங்களை எழுத $1 : \sqrt{3} : 2$ என்ற விகிதத்தில் உள்ள செங்கோணமுக்கோணத் துணைப்படம் வரைந்துகொள்ளவும்].

**பயிற்சி 9**

மதிப்பைக் காண்க:

1. $\sin 30^\circ \cos 60^\circ + \cos 30 \sin 60^\circ$
2. $\sin 45^\circ \cos 60^\circ + \cos 45^\circ \sin 60^\circ$
3. $\sin^2 30^\circ + \sin^2 60 + \tan^2 45^\circ$
4. $\tan^2 30^\circ + 2 \sin^2 45^\circ + \frac{1}{3} \sin^2 60^\circ$
5. $\sin 60^\circ \tan^2 60^\circ \tan 30^\circ$
6. $\frac{1}{3} \cos^2 30^\circ - \frac{1}{2} \operatorname{cosec}^2 30^\circ \tan^2 30^\circ + \frac{4}{3} \cos^2 45^\circ$ $\cot^2 30^\circ$
7. $\sec^2 30^\circ + 2 \operatorname{cosec}^2 45^\circ - 4 \tan^2 30^\circ$

8. $2 \tan^2 60° - \frac{3}{2} \tan^2 30° \sec 60° + \frac{3}{2} \cos^2 30°$

9. $\tan^2 30° + 2 \sin 60° + \tan 45° - \tan 60° + \cos^2 30$

10. $4 \cot^2 30° + 9 \sin^2 60° - 6 \operatorname{ccsec}^2 60° - \frac{9}{4} \tan^2 30.$

**3·5 சைன், கோசைன், டான்ஜண்டு மதிப்புப் பட்டியல்கள்:** கோண விகிதங்களின் மதிப்புக்கள், பட்டியல்களில் தரப்படுகிறது. 0° டிகிரியிலிருந்து 90° முடிய 1 மினிட் வேறுபாட்டில் உள்ள, ஒவ்வொரு கோணத்திற்கும் கோணவிகித மதிப்புக்களை இப் பட்டியல்களிலிருந்து கண்டறியலாம். பட்டியலின் விவரத்தையும், அதைப் பயன்படுத்தும் முறையையும் கீழே தருகின்றோம்.

**பட்டியல் விளக்கம்**

1. முதல் பத்தியில் 0°, 1° என ... 89° வரை ஒன்றன்கீழ் ஒன்ருகக் காணப்படும். இவ்வாறு பட்டியலில் 90 வரிகள் உள்ளன.

2. முதல் பத்தியை அடுத்துள்ள பத்து பத்திகளின் (columns) தலைப்பில் 0′, 6′, 12′, 18′, 24′, 30′, 36′, 42′, 48′, 54′ எனக் காணலாம். ஒவ்வொரு தலைப்பின்கீழும் ஒவ்வொரு வரியிலும் மதிப்புக்கள் 4 சிற்றிலக்கங்களாகக் காணப்படுகின்றன. 2958 எனக் காணப்பட்டால் ·2958 எனப் பொருளாகும். கோணங்களின் சைன், கோசைன் விகிதங்களும், 45°க்குக் குறைவான கோணங்களின் டான்ஜண்டு விகிதங்களும் இவ்வாறு 4 தசமத்தானத் திருத்தமாகப் பின்னங்களில் தரப்படுகின்றன.

3. இவ்வாறு 6 மினிட் ($\frac{1}{10}$ டிகிரி) வேறுபாட்டில் (Difference of 6′) உள்ள கோணங்களின் கோண விகிதங்களைப் பட்டியலி லிருந்து நேரே எழுதலாம்.

**மாதிரி 1 :** sin 18° 18′இன் மதிப்பைப் பட்டியலிலிருந்து எழுது.

(i) சைன் விகிதப் பட்டியலை எடுத்துக்கொள்.

(ii) 18° எனத் தொடங்கும் வரியில் 18′ என்ற தலைப்பின்கீழ் உள்ள சிற்றிலக்கங்களைப் பார். 3140 எனக் காண்கிறது.

(iii) ஆகவே sin 18° 18′ = ·3140.

**மாதிரி 2:** tan $63^\circ 30'$ இன் மதிப்பு என்ன?

*(i)* டான்ஜண்டு விகிதப் பட்டியலை எடுத்துக்கொள்.

*(ii)* $63^\circ$ என்று தொடங்கும் வரியில் $30'$ என்ற தலைப்பின்கீழ் உள்ள எண்களைப் பார். அவைகள் மேலே கோடு இருப்பதால் முழுஎண் பாகம் 1க்குமேல் 1 அதாவது 2. பின்னபாகம் ·0057.

*(iii)* $\therefore \tan 63^\circ 30' = 2{\cdot}0057$

## பயிற்சி 10

நான்கு இலக்கக் கோணப் பட்டியலிலிருந்து மதிப்பு எழுதுக.

(1) $\sin 24^\circ 36'$ (2) $\sin 68^\circ 42'$ (3) $\tan 42^\circ 18'$
(4) $\tan 63^\circ 42'$ (5) $\cos 2^\circ 18'$ (6) $\cos 82^\circ 12'$
(7) $\cos 40^\circ 6'$ (8) $\cos 57^\circ 48'$ (9) $\tan 72^\circ 36'$

1 மினிட் $\left(\frac{1}{60}^\circ\right)$ வேறுபாட்டில் கோண விகிதம் காண:

**மாதிரி:** $\sin 18^\circ 22'$ இன் மதிப்பைக் காண்க.

பட்டியலில் $\sin 18^\circ 18'$ இன் மதிப்பு ·3140 எனக் காண்கிறோம்.

இன்னும் $4'$ அதிகத்திற்கு, அடுத்த ஐந்து பத்தியில் $4'$க்கீழ் உள்ள 11ஐ இத்துடன் கூட்டவும்.

$\therefore \sin 18^\circ 22' = {\cdot}3151.$

**மாதிரி:** cos $38^\circ 41$ இன் மதிப்பு என்ன?

$\cos 38^\circ 36' = 0{\cdot}7815$

அதிக $5'$க்கு = 9 இதைக் கழிக்க வேண்டும்.

ஏனெனில் கோணம் அதிகரிக்கும்போது கோசைன் விகிதம் குறைகிறது.

$\therefore$ cos $38^\circ$ 41ன் மதிப்பு $= 0{\cdot}7806.$

## பயிற்சி 11

**மதிப்புக் காண்க:**

(1) $\sin 5^\circ 10'$ (2) $\cos 84^\circ 50'$ (3) $\sin 45^\circ 32'$
(4) $\cos 54^\circ 28'$ (5) $\sin 72^\circ 20'$ (6) $\cos 17^\circ 40'$
(7) $\tan 44^\circ 27'$ (8) $\tan 32^\circ 27'$ (9) $\tan 78^\circ 41'$

## பயிற்சி 12

பட்டியலைப் பயன்படுத்திக் கோணத்தை மினிட் திருத்தமாகக் காண்க.

| | |
|---|---|
| 1. $\sin A = \cdot 8988$ | 2. $\sin x = \cdot 9755$ |
| 3. $\cos B = \cdot 2588$ | 4. $\cos A = \cdot 6361$ |
| 5. $\tan \theta = \cdot 4663$ | 6. $\tan B = 1 \cdot 6643$ |
| 7. $\tan x = 3 \cdot 0061$ | 8. $\sin \theta = \cdot 5637$ |
| 9. $\cos A = \cdot 8592$ | 10. $\cos \theta = \cdot 3728$. |

**நிரப்பு கோணங்களும் அவைகளின் கோண விகிதங்களும்.**




ABC என்ற முக்கோணத்தில் $\angle C = 90^\circ$ $\therefore$ $\angle A + \angle B = 90^\circ$ $\angle A$யின் நிரப்பு கோணம் $\angle B$ ஆகும். $\angle B$யின் நிரப்பு கோணம் $\angle A$ ஆகும். அதாவது $\angle B = 90 - A$:

A, B இவற்றுள் ஒன்று மற்றதன் நிரப்பு கோணம்.

**கோண விகிதங்கள்.** படத்திலிருந்து

$$\cos A = \frac{AC}{AB} \qquad \sin B = \frac{AC}{AB}$$

$$\therefore \quad \cos A = \sin B$$

சைன் (கோணம்) = கோசைன் (நிரப்பு கோணம்)
கோசைன் (கோணம்) = சைன் (நிரப்பு கோணம்).

$$\tan B = \frac{AC}{BC} = \cot A$$

∴ டான்ஜண்டு (கோணம்)

= கோடான்ஜண்டு (நிரப்பு கோணம்).

இவ்வாறு எடுத்துக்காட்டாக

$\sin 52^\circ = \cos 38^\circ$; $\sin 38^\circ = \cos 52^\circ$

$\sec 62^\circ = \operatorname{cosec} 28^\circ$; $\tan 36^\circ = \cot 54^\circ$

என ஆகும்.

**பயிற்சி (வாய்மொழி) 13**

நிரப்பு கோணங்களின் கோண விகிதங்களாகக் கூறுக.

1. $\cos 30^\circ$
2. $\sin 60^\circ$
3. $\tan 30^\circ$
4. $\sin 70^\circ$
5. $\sin 45^\circ$
6. $\tan 70^\circ$
7. $\sec 30^\circ$
8. $\cot 40^\circ$
9. $\cot 72^\circ$
10. $\tan 37^\circ$
11. $\cos 15^\circ$
12. $\cos 22^\circ 18'$
13. $\sin 34^\circ 36'$
14. $\tan 28^\circ 42'$
15. $\sec 36^\circ 18'$

# 4. கோண விகிதம் — பொது விளக்கம்

## (Trigonometrical ratio — General definition)

இதுவரை குறுங் கோணங்களின் கோண விகிதங்கள் என்ன என்பதைப்பற்றிக் கூறினோம். ஆனால், கோணங்களின் அளவு 90°க்கு மேலேயும் இருக்கலாம் எனக் கண்டோம். ஆகவே, கோணம் எத்தகையதாயினும், கோணவிகிதம் என்ன என்பதை விளக்குவோம்.

4·1 பொது விளக்கம். OP எனும் கோடு OA எனும் கோட்டுடன் பொருந்தியிருந்து, பிறகு 'θ' எனும் கோண அளவுக்குச் சுற்றட்டும். OAஐ $x$ அச்சாகக் கொள்க. OAக்குக் குத்தாகவுள்ள Y'OYஐ $y$ அச்சாகக் கொள்க.




படம் (i)

Pயின் உறுப்பு $(x, y)$ ஆகுக.

OPயின் நீளம் $r$ ஆகுக.

அப்போது 'θ' எனும் கோணத்தின்

சைன் விகிதம் $= \dfrac{y}{r}$

கோசைன் விகிதம் $= \dfrac{x}{r}$

அதாவது $\boxed{\sin\theta = \dfrac{y}{r};\quad \cos\theta = \dfrac{x}{r}}$

மற்ற விகிதங்களை இவ்விரண்டு விகிதங்களைக் கொண்டு விளக்குவோம்.

$$\tan\theta = \frac{\sin\theta}{\cos\theta} = \frac{y}{x}$$

$$\operatorname{cosec}\theta = \frac{1}{\sin\theta} = \frac{1}{\frac{y}{r}}$$

$$\sec\theta = \frac{1}{\cos\theta} = \frac{1}{\frac{x}{r}}$$

$$\cot\theta = \frac{1}{\tan\theta} = \frac{1}{\frac{y}{x}}$$

**குறிப்பு 1 :** படம் (1)இலிருந்து குறுங்கோணத்தின் கோண விகித விளக்கம் இந்தப் பொது விளக்கத்தில் அடங்கி யுள்ளதைக் காணலாம். $\theta$ எனும் கோணம் $90°$க்குக் குறைவானால் Pயின் $y$ உறுப்பு '$\theta$' எனும் கோணத்தின் எதிர்ப்பக்கமாகவும், $x$ உறுப்பு, அடுத்த பக்கமாகவும் R = OP கர்ணமாகவும் அமைவதைக் காண்க.

**குறிப்பு 2:** OP மற்ற மூன்று பிரிவுகளில் அமையும்போது, கோண விகிதங்கள் எத்தகையன என்பதைப் படங்கள் (*ii*) (*iii*) (*iv*) காட்டுகின்றன.




படம் (ii)




படம் (iii)




படம் (iv)

**குறிப்பு 3 :** எல்லாப் படங்களிலிருந்தும் நாம் அறிவது, கோணம் எத்தகையதாயினும் Pயின் $(x, y)$ உறுப்புக்கள் OPஐவிட (rஐவிட) அதிகமல்ல என்பதாம். ஆகவே, கோணம் எத்தகையதாயினும், அதன் சைன், கோசைன் விகிதங்கள் மதிப்பில் 1ஐவிட அதிகமாகாது.

**குறிப்பு 4 :** எல்லாப் படங்களிலிருந்தும் நாம் அறிவது

$$x^2 + y^2 = r^2$$

$$\therefore \left(\frac{x}{r}\right)^2 + \left(\frac{y}{r}\right)^2 = 1$$

$$\therefore \cos^2\theta + \sin^2\theta = 1$$

குறுங் கோணத்திற்கு இத்தகைய முற்றொருமையைக் கண்டோம். இங்கே கோணம் எத்தகையதாயினும் முற்றொருமை பொருந்தும் என்பதைக் காண்கிறோம்.

இரு புறத்தையும் $\cos^2\theta$ ஆல் வகுக்க

$$1 + \frac{\sin^2\theta}{\cos^2\theta} = \frac{1}{\cos^2\theta}$$

$$\therefore 1 + \tan^2\theta = \sec^2\theta$$

இரு புறங்களையும் $\sin^2\theta$ ஆல் வகுக்க

$$\frac{\cos^2\theta}{\sin^2\theta} + 1 = \frac{1}{\sin^2\theta}$$

$$\therefore \cot^2\theta + 1 = \operatorname{cosec}^2\theta$$

**குறிப்பு 5 :** '$x$', '$y$' அச்சு தூரங்களையும் '$r$'ஐயும் நாம் எந்த அலகால் வேண்டுமாயினும் அளக்கலாம். கோண விகிதங்கள் விகிதமாதலினால், அவற்றின் மதிப்புத் தூரங்களை அளக்கும் அலகுகளைப் பொறுத்தது அன்று. 'OP'ஐ அலகாகக் கொண்டால் $r = 1$ என ஆகிறது.

* அப்போது $\sin \theta = y$ $\cos \theta = x$ என ஆகிறது.

கோணம் மாறும்போது, அதன் கோண விகிதங்கள் எவ்வாறு மாறுகின்றன என்பதைக் காண இதைப் பயன்படுத்துவோம்.

## 4·2 கோணவிகிதங்களின் குறிகள். (Signs of Trigonometric ratios).

கோண விகிதங்களின் பொது விளக்கத்திலிருந்து, காண்பது.

ஒரு கோணத்தின் சைன் விகிதம் Pயின் $y$ உறுப்பு. நேரெண்ணுகுமிடத்து நேரெண்ணுகவும், அது எதிரெண்ணுகுமிடத்து, எதிரெண்ணுகவும் இருக்கும் எனத் தெரிகிறது.

இதே போலக் கோசைன் விகிதம், $x$ உறுப்பின் குறியைப் பொறுத்தது. இவற்றைப் படத்தால் விளக்குவோம்.




*The Defenition of sine of an angle and cosine of an angle as given by Bhaskara in his 'Gola Dipika' is as follows: 'sine' is distance from East West line.

Cosine is distance from North South line. Here $y$ is distance from East West line; $x$ is distance from North South line."

**குறிப்பு:** கோண விகிதத்தின் குறியை நிச்சயிக்க

(i) சுற்றும் எந்தப் பிரிவில் அமைகிறதெனப் பார்.

(ii) அங்கு $y$ உறுப்பு $\pm$ ஆனால் சைன் $\pm$ ஆகும்.

$x$ உறுப்பு $\pm$ ஆனால் கோசைன் $\pm$ ஆகும்.

இதனால் விகிதங்களின் குறி முடிவு செய்யப்படும்.

## பயிற்சி 15

(வாய்மொழி)

கீழ் வரும் கோண விகிதங்களின் குறி என்ன எனக் கூறுக.

1. $\sin 120°$ 2. $\cos 110°$ 3. $\tan 160°$
4. $\text{cosec } 140°$ 5. $\sec 210°$ 6. $\tan 280°$
7. $\sin 240°$ 8. $\sin 300°$ 9. $\cos 320°$
10. $\sin 280°$ 11. $\sin -330°$ 12. $\cos -210°$
13. $\tan \frac{\pi}{3}$ 14. $\cos \frac{2\pi}{3}$ 15. $\sin \frac{5\pi}{4}$
16. $\sec \frac{7\pi}{4}$ 17. $\cos -\frac{3\pi}{4}$ 18. $\cos -\frac{7\pi}{3}$
19. $\sin -\frac{9\pi}{5}$ 20. $\tan -\frac{5\pi}{3}$

**4·3 O°இன் கோண விகிதங்கள் :** X′ OX × Y′ OY என்பன ஒன்றற்கொன்று குத்தாகவுள்ள இரு கோடுகள்.

OP எனும் ஆரம், OXஇலிருந்து புறப்பட்டுச் சுழல்கிறது. OPயின் நீளம் 1 ஆகுக. கோணம் O°, என்றால் OP OX உடன் பொருந்துகிறது. Pயின் உறுப்புக்கள் (1, O)




$\therefore \sin O° = \frac{y}{OP} = O$

$\cos O° = \frac{x}{OP} = 1$

$$\therefore \sin O° = \mathbf{O}$$
$$\cos O° = \mathbf{1}$$
$$\therefore \tan O° = \mathbf{O}$$

## 4·4 90° (அல்லது $\frac{\pi}{2}$ ரேடியன்) இன் கோண விகிதம்.

OP எனும் சுற்று ஆரம், கால் வட்டம் சுழல 90° அல்லது $\frac{\pi}{2}$ ரேடியன் கோணம் ஏற்படுகிறது. $\angle XOP = 90°$; Pயின் உறுப்புக்கள் இப்போது (0, 1). ஆகவே கோண விகிதங்களின் பொது விளக்கத்தின்படி

$$\sin 90° = \frac{\text{Pயின் } y \text{ உறுப்பு}}{OP} = 1$$

$$\cos 90° = \frac{\text{Pயின் } x \text{ உறுப்பு}}{OP} = 0$$

**குறிப்பு 1** tan 90° : OP எனும் ஆரம் $y$ அச்சை நெருங்கட்டும். $\tan XOP = \frac{y}{x}$, OPஅச்சை நெருங்கும்போது $\angle XOP$ கோணம் 90°ஐ அணுகுகிறது. $y$ அதிகரிக்கிறது. அதாவது 1ஐ அணுகுகிறது; $x$இன் அளவு 0ஐ நெருங்குகிறது. ஆகவே $\frac{y}{x}$ மிக அதிகமாகிறது. கணித மொழியில் $\theta$ எனும் கோணம் 90°ஐ அணுகும்போது tan $\theta$இன் மதிப்பு "அலகிலா மதிப்பு" ஆகிறது. (tan $\theta$ tends to infinity) என்கிறோம். குறியீட்டில் $\tan \theta \xrightarrow[\theta \to 90°]{} \infty$ எனக் காட்டப்படுகிறது. சாதாரணமாகக் கூறும் போது $\tan 90° = \infty$ என்கிறோம்.

**குறிப்பு 2:** $\sin \theta = \frac{y}{OP}$ $\cos \theta = \frac{x}{OP}$. ஆகவே $\theta$ எனும் கோணம் 90°க்கு 0விலிருந்து அதிகமாகும்போது sin $\theta$இன் மதிப்பு 0விலிருந்து 1க்கு அதிகரிக்கிறது.

## 4·4 180°இன் ($\pi$ ரேடியனின்) கோண விகிதம் :

OP அரைவட்டம் சுற்றினுல் (OXவிருந்து) OX′ உடன் பொருந்துகிறது.

Pயின் உறுப்புக்கள் (− 1, 0)

$\angle XOP = 180°$

ஆகவே $\sin 180° = \frac{Y}{OP} = 0$

$$\cos 180° = \frac{X}{OP} = -1$$

$$\therefore \tan 180° = \frac{Y}{X} = 0$$

4·5 $(180-\theta)$ன் அல்லது $(\pi-\theta)$இன் கோண விகிதங்கள்

X'OX, Y'OY இருகுத்து அச்சுக்கோடுகள் OP எனும் ஆரம் OXவிருந்து சுழல்கிறது.

$OP_1$ என்ற நிலையில் $\angle XOP_1 = \theta$ ஆகுக.

$OP_2$ என்ற நிலையில் $\angle XOP_2 = 180 - \theta$ ஆகுக.

$P_1$இலிருந்து X அச்சுக்கு $P_1 M_1$ குத்துக்கோடு ஆகுக.

$P_2$விருந்து X அச்சுக்கு $P_2 M_2$ குத்துக்கோடு ஆகுக.

OPஐ அலகாகக்கொண்டு உறுப்புக்களை அளக்கவும்.

$P_1$இன் உறுப்புக்கள் $(X_1, Y_1)$ ;

$P_2$இன் உறுப்புக்கள் $(X_2, Y_2)$ ஆகுக.

(OP = 1 எனக் கொண்டுள்ளோம்)




பொது விளக்கப்படி

$Y_1 = \sin\theta$ $\qquad Y_2 = \sin(180-\theta)$

$X_1 = \cos\theta$ $\qquad X_2 = \cos(180-\theta)$

ஆனால் $\triangle OM_1P_1 \equiv \triangle OM_2P_2$ $\quad \left\{ \begin{array}{l} \because OP_1 = OP_2 \\ M_1OP_1 = M_2OP_2 = \theta \\ P_1M_1O = P_2M_2O = 90° \end{array} \right.$

$\therefore M_2P_2 = M_1P_1 \qquad OM_2 = OM_1$

$Y_2 = Y_1 \qquad X_2 = -X_1$

$\therefore \sin(180-\theta) = \sin\theta, \quad \cos(180-\theta) = -\cos\theta$

$$\tan \overline{180 - \theta} = \frac{\sin \overline{180 - \theta}}{\cos \overline{180 - \theta}} = \frac{\sin \theta}{-\cos \theta} = -\tan \theta$$

$$\therefore \ \mathbf{\tan (180 - \theta) = -\tan \theta}$$

| டிகிரி அளவையில் | ரேடியன் அளவையில் |
|---|---|
| $\sin (180 - \theta) = \sin \theta$ * | $\sin (\pi - \theta) = \sin \theta$ |
| $\cos (180 - \theta) = -\cos \theta$ | $\cos (\pi - \theta) = -\cos \theta$ |
| $\tan (180 - \theta) = -\tan \theta$ | $\tan (\pi - \theta) = -\tan \theta$ |
| $\operatorname{cosec} (180 - \theta) = \operatorname{cosec} \theta$ * | $\operatorname{cosec} (\pi - \theta) = \operatorname{cosec} \theta$ |
| $\sec (180 - \theta) = -\sec \theta$ | $\sec (\pi - \theta) = -\sec \theta$ |
| $\cot (180 - \theta) = -\cot \theta$ | $\cot (\pi - \theta) = -\cot \theta$ |

**குறிப்பு :** மேற்கூறிய தொடர்புகள் மிக முக்கியமானவை. ஏனெனில் $\theta$ குறுங்கோணமானால் $(180 - \theta)$ விரிகோணமாகும். இரண்டு கோணங்களும், ஒன்றற்கொன்று மிகைநிரப்பு கோணங்களாகும்.

ஒரு விரிகோணத்தின் (obtuse angle) கோண விகிதம் காண, அதன் மிகைநிரப்புக் கோணத்தின், அதே விகிதத்தின் மதிப்பைப் பட்டியலிலிருந்து எழுதவும். கோண விகிதம் நேரெண்ணு அல்லது எதிரெண்ணு (negative) என்பதும் தெரியும். ஆகவே, சரியான மதிப்பை எழுத முடியும்.

**உதாரணம் :** கீழ்வரும் கோண விகிதங்களைக் காண்க.

*(i)* $\sin 135^\circ$ *(ii)* $\cos 150^\circ$ *(iii)* $\tan 120^\circ$

*(iv)* $\cos 138^\circ 24'$ *(v)* $\sin 152^\circ 36'$.

*(i)* 135இன் மிகைநிரப்பு கோணம் 45° சைன் விகிதம் நேரெண்ணாகும்.

$$\therefore \ \sin 135^\circ = \sin 45^\circ = \frac{1}{\sqrt{2}}$$

$$(ii) \ \cos 150^\circ = -\cos 30^\circ = -\frac{\sqrt{3}}{2}$$

$$(iii) \ \tan 120^\circ = -\tan 60^\circ = -\sqrt{3}$$

$$(iv) \ \cos 138^\circ 24' = -\cos 41^\circ 36'$$

$$(v) \ \sin 152^\circ 36' = \sin 27^\circ 24'$$

## பயிற்சி 16

மதிப்புக் காண்க.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (i) | sin 150° | (ii) | cos 150° | (iii) | tan 120° |
| (iv) | sin 140° | (v) | tan 100° | (vi) | cos 163° 18′ |
| (vii) | sin 130° 24′ | (viii) | cos 124° | (ix) | sec 120° |
| (x) | cosec 150° | (xi) | cot 135° | (xii) | sec 150° |

### 4·6 $-\theta$இன் கோண விகிதங்கள்.

X′OX, Y′OY அச்சுக்கோடுகள் OP எனும் சுற்று ஆரம் $x$ அச்சுடன் பொருந்தும்போது

(i) Pயின் நிலை A ஆகுக ;

(ii) $\theta$ எனும் கோணம் ஏற்படும்போது $OP_1$ ஆகுக ;

(iii) எதிர்த்திசையில், அதாவது வலமாக $\theta°$ சுழன்று நிற்கும் போது $OP_4$ ஆகுக.




$Y_1$

$\therefore \angle XOP_1 = \theta \qquad \angle XOP_4 = -\theta$

$P_1\ (x_1, y_1)$; $P_4\ (x_4, y_4)$ ஆகுக.

$P_1 P_4$ $x$அச்சை Mல் வெட்டட்டும்.

$OP_1 = OP_4$; $OM = OM$ $\angle MOP_1 = \angle MOP_4 = \theta$

$\therefore \triangle MOP_1 \equiv \triangle MOP_4$

$\therefore \angle OMP_1 = \angle OMP_4 = 90°$

$MP_1 = -MP_4$ (அளவிலும், ராசியிலும்)

$\therefore y_1 = -y_4 \qquad y_4 = -y_1$

$\therefore \sin(-\theta) = -\sin\theta$

இத்துடன் $x_4 = OM = x_1 \quad \therefore \cos(\theta) = \cos\theta$

$\therefore \quad \tan(-\theta) = -\tan\theta$

[cosec $(-\theta) = -$ cosec $\theta$; sec $(-\theta) =$ sec $\theta$; cos $(-\theta) = -\cot\theta$ எனவும் வருகிறது.]

### பயிற்சி 17

மதிப்பை எழுதுக.

1. $\sin(-30°)$ 2. $\cos(-45°)$ 3. $\tan -\frac{2\pi}{3}$

4. $\tan\left(-\frac{\pi}{4}\right)$ 5. $\sin(-60°)$ 6. $\sin(-32°)$

7. $\cot(-18°28')$ 8. $\tan(28°42')$ 9. $\sin(-135°)$

10. $\cos(-150°)$ 11. $\tan(-120°)$ 12. $\text{cosec}(-60°)$

13. $\sec(-120°)$ 14. $\cot(-120°)$ 15. $\cot(-150°)$

**4·7 180° + θஇன் [அல்லது (π + θ)இன்] கோண விகிதங்கள்.**

X'OX, Y'OY என்பவை முறையே, $x$, $y$ அச்சுக்கள். OP எனும் சுற்று ஆரம் OX வுடன் பொருந்தியிருந்து, θ° கோண அளவுக்குச் சுழன்று $OP_1$ல் நிற்கிறது.




$\angle XOP_1 = \theta$; $P_1(x_1\ y_1)$ ஆகுக. ஆரம் இன்னும் 180° (அல்லது π ரேடியன்) சுழன்று $OP_3$ எனும் நிலையில் நிற்கட்டும்.

$\therefore$ பின்வளைகோணம் $XOP_3 = 180° + \theta$; $P_3(x_3, y_3)$ ஆகுக.

$x$ அச்சுக்கு $P_1 M_1$, $P_3 M_3$ எனும் குத்துக் கோடுகள் வரைக.

$\triangle M_3 OP_3 \equiv \triangle M_1 OP_1$ (படத்திலிருந்து எளிதில் தெரிகிறது)

$$M_3 P_3 = M_1 P_1 \qquad OM_3 = OM_1$$

$$\therefore \quad y_3 = -y_1 \qquad x_3 = -x_1$$

$$\therefore \sin(180+\theta) = -\sin\theta; \quad \cos(180+\theta) = -\cos\theta$$

$$\tan(180+\theta) = \frac{\sin(180+\theta)}{\cos(180+\theta)} = \frac{-\sin\theta}{-\cos\theta} = \tan\theta$$

| டிகிரி அளவை | ரேடியன் அளவை |
|---|---|
| $\sin(180+\theta) = -\sin\theta$ | $\sin(\pi+\theta) = -\sin\theta$ |
| $\cos(180+\theta) = -\cos\theta$ | $\cos(\pi+\theta) = -\cos\theta$ |
| $\tan(180+\theta) = \tan\theta$ | $\tan(\pi+\theta) = \tan\theta$ |

4·8 $90^\circ-\theta$ [அல்லது $\frac{\pi}{2}-\theta$ ரேடியனின்] கோண விகிதங்கள். $X'OX$, $Y'OY$ இவை $x$, $y$, அச்சுக்கள். OP எனும் சுற்றும் ஆரம், $x$ அச்சுடன் $\theta$ கோணம் ஏற்படுத்துகிறது.

அதாவது $\angle XOP = \theta$

OP′ என்ற நிலையில் $\angle YOP' = \theta$ ஆகுக.

$\therefore \quad XOP' = 90\ \theta$.

$P(x, y)$, $P'(x', y')$ ஆகுக.




OP யின் நீளம் 1 எனக் கொள்வோம். P யிலிருந்து $x$ அச்சுக்கு PM எனும் குத்துக்கோடும், Pயிலிருந்து $y$ அச்சுக்கு P′M′ எனும் குத்துக்கோடும் வரைக.

$\triangle OM'P' = \triangle OMP$ எனத் தெரிகிறது.

$$OM' = OM \qquad M'P' = MP$$

$$y' = x \qquad x' = y$$

$$\therefore \quad \sin(90^\circ-\theta) = \cos\theta \qquad \cos(90^\circ-\theta) = \sin\theta$$

$$\therefore \quad \tan(90-\theta) = \frac{\sin\overline{90-\theta}}{\cos\overline{90-\theta}} = \frac{\cos\theta}{\sin\theta} = \cot\theta$$

| டிகிரி அளவையில் | ரேடியனில் |
| --- | --- |
| $\sin(90-\theta) = \cos\theta$ | $\sin\left(\frac{\pi}{2}-\theta\right) = \cos\theta$ |
| $\cos(90-\theta) = \sin\theta$ | $\cos\left(\frac{\pi}{2}-\theta\right) = \sin\theta$ |
| $\tan(90-\theta) = \cot\theta$ | $\tan\left(\frac{\pi}{2}-\theta\right) = \cot\theta$ |
| $\text{cosec}(90-\theta) = \sec\theta$ | $\text{cosec}\left(\frac{\pi}{2}-\theta\right) = \sec\theta$ |
| $\sec(90-\theta) = \text{cosec}\,\theta$ | $\sec\left(\frac{\pi}{2}-\theta\right) = \text{cosec}\,\theta$ |
| $\cot(90-\theta) = \tan\theta$ | $\cot\left(\frac{\pi}{2}-\theta\right) = \tan\theta$ |

[ **குறிப்பு :** $\theta$ குறுங்கோணமானல், மேற்கூறிய தொடர்புகளைச் செங்கோண முக்கோணத்திலிருந்து முன்பே அடைந்துள்ளோம் ].

4·9 $(90+\theta)$ இன் $\left[\left(\frac{\pi}{2}+\theta\right)\right.$ இன் $\left.\right]$ கோணவிகிதங்கள் :

**X'OX₁ Y'OY** முறையே $x$, $y$ அச்சுக்கள், சுற்றும் ஆரம் **OP**, $x$ அச்சுடன் $OP_1$ என்ற நிலையில் '$\theta$' எனும் கோணம் ஏற்படுத்துகிறது. $OP_2$ என்ற நிலையில் $\angle XOP_2 = 90 + \theta$ எனும் கோணம் ஏற்படுத்துகிறது. அதாவது $YOP_2 = \theta$ ஆகிறது. $P_1(x_1, y_1)$; $P_2(x_2\ y_2)$ ஆகுக.




$OP = 1$; என ஆகுக.

[அதாவது நீளத்தை அளக்க OP ஐ அலகாகக் கொண்டுள்ளோம் என்பதாம்].

$P_1 M_1$ $x$ அச்சுக்குக் குத்தாகுக.

$P_2 M_2$, $y$ அச்சுக்குக் குத்தாகுக.

$\therefore \quad \triangle OM_2 P_2 \equiv \triangle OM_1 P_1$

$\therefore \quad y_2 = x_1 \quad x_2 = -x_1$

$\sin (90 + \theta) = \cos \theta \qquad \cos (90 + \theta) = -\sin \theta$

$$\therefore \quad \tan (90 + \theta) = \frac{\sin (90 + \theta)}{\cos (90 + \theta)} = \frac{\cos \theta}{-\sin \theta} = -\cot \theta$$

| | |
|---|---|
| $\therefore \quad \sin (90 + \theta) = \cos \theta$ | $\sin\left(\frac{\pi}{2} + \theta\right) = \cos \theta$ |
| $\cos (90 + \theta) = -\sin \theta$ | $\cos\left(\frac{\pi}{2} + \theta\right) = -\sin \theta$ |
| $\tan (90 + \theta) = -\cot \theta$ | $\tan\left(\frac{\pi}{2} + \theta\right) = -\cot \theta$ |
| $\text{cosec} (90 + \theta) = \sec \theta$ | $\text{cosec}\left(\frac{\pi}{2} + \theta\right) = -\sec \theta$ |
| $\sec (90 + \theta) = -\text{cosec}\, \theta$ | $\sec\left(\frac{\pi}{2} + \theta\right) = -\text{cosec}\, \theta$ |
| $\cot (90 + \theta) = -\tan \theta$ | $\cot\left(\frac{\pi}{2} + \theta\right) = -\tan \theta$ |

4·10 $(270 - \theta)$; $(270 + \theta)$இன் கோண விகிதங்கள் :






இரண்டிலும் $\angle XOP_1 = O$. $P_1 (x_1 y_1)$ ஆகுக. $P_1 M_1 \perp OX$; $P_3 M_3 \perp OY'$ $P_4 M_4 \perp OY'$ படத்திலிருந்து எளிதில் அறிவது.

$$OM_3 = OM_1 \qquad OM_4 = OM_1$$

$$y_3 = -x_1 \qquad y_4 = -x_1$$

$$\sin(270 - \theta) = -\cos\theta \qquad \sin(270 + \theta) = -\cos\theta$$

$$M_3 P_3 = M_1 P_1 \qquad M_4 P_4 = M_1 P_1$$

$$x_3 = -y_1 \qquad x_4 = y_1$$

$$\therefore \cos(270 - \theta) = -\sin\theta \qquad \cos(270 + \theta) = \sin\theta$$

$$\therefore \tan(270 - \theta) = \cot\theta \qquad \tan(270 + \theta) = -\cot\theta$$

*4·11* **குறிப்பு :** கோண விகித விளக்கத்திலிருந்து நாம் அறிவது, கோணம் எத்தகைய அளவாயினும், சுற்று ஆரம் 4 பிரிவுகளில் (Four quadrants) ஒரு பிரிவில் அமையவேண்டும்.

அந்த நிலையிலிருந்து, முழுச்சுற்றுக்களாக எத்தனை சுற்றுக்கள் இடமாகவோ வலமாகவோ சுற்றினாலும் அதே நிலைக்கு வந்து சேரும்.

ஆதலால் கோணத்தின் மதிப்பு முழு வட்டங்களாக அதிகமாகவோ, குறையவோ செய்தால், கோண விகிதங்களின் மதிப்பு மாறுபடாது. இதைக் கணிதக் குறியீட்டில்

$$\sin\theta = \sin(n\,360^\circ + \theta)$$

$$\cos\theta = \cos(n\,360^\circ + \theta)$$

$$\tan\theta = \tan(n\,360^\circ + \theta)$$

எனக் கூறுகிறோம். [$n$ நேர் அல்லது எதிர் முழு எண்ணாகும்]

ரேடியன் அளவையில்

$$\sin\theta = \sin(2n\pi + \theta)$$

$$\cos\theta = \cos(2n\pi + \theta)$$

$$\tan\theta = \tan(2n\pi + \theta)$$

இவ்வாறாகக் கோணம், ஒவ்வொரு $360^\circ$ அதிகமாகும் போதும், கோண விகிதம் மறுபடியும் மறுபடியும் அதே மதிப்பை அடைவதால் கோண விகிதங்கள் 'திரும்பத் திரும்ப' மதிப்படையும் சார்பலன்கள் (Periodic functions) எனப்படும்.

4·12 **குறிப்பு :** கோணம் எந்த மதிப்பாயினும் அதன் கோண விகிதத்தைக் குறுங்கோணங்களுக்குரிய கோணவிகிதப் பட்டியல் களிலிருந்து காணலாம். இதற்கு இதுவரை கண்ட தொடர்புகள் பயன்படுகின்றன. அவற்றை நினைவுகூர ஒரு வழி கீழே கூறுவோம்.

1. கோணம் தரப்பட்டால், சுற்று ஆரம் எவ்வாறு சுற்றுகிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்கவும்.

2. கோணத்திலிருந்து $360°$ இன் மடங்குகளை (ரேடியனில் தரப்பட்டால் $2\pi$ இன் மடங்குகள்) நீக்கவும்.

3. எஞ்சிய கோணத்தைத் துணைப் படத்தில் வரைந்து எந்தப் பிரிவில் சுற்று ஆரம் அமைகிறது எனப் பார்க்கவும். $\left(\frac{\pi}{4}\right.$ என்பது கால் வட்டம் என்பதை நினைவு கூர்க.$\left.\right)$

4. இப்போது கோண விகிதத்தின் குறி + அல்லது − என்பது தெளிவாகிறது.

5. மதிப்புக் காண, $x$ அச்சுடன் சுற்று ஆரம் என்ன குறுங் கோணம் ஏற்படுத்துகிறதோ அந்தக் கோணத்தின் கோண விகிதமாகும். அல்லது $y$ அச்சுடன் எந்தக் குறுங்கோணம் ஏற்படுத்துகிறதோ அதன் துணைக் கோண விகிதம் (Coratios) ஆகும்.

{ [சைன், கோசைன்] [சீகண்டு, கோசீகண்டு] [டான்ஜண்டு, கோடான்ஜண்டு] இவை ஒன்றற்கொன்று துணை விகிதங்க ளெனப்படும். }

**மாதிரி:** (*i*) $\sin 840°$ இன் மதிப்பு என்ன?

$$840° = 2 \times 360° + 120°$$

$\therefore \quad \sin 840° = \sin 120°$; விகிதத்தின் **குறி** +

$$= + \sin 60°$$

$$\therefore \quad \sin 840° = \frac{\sqrt{3}}{2}$$

6. ABCD என்ற சதுரத்தில் A ஆனது (2, 3) ஆகவும், B என்பது (−3, 3) ஆகவும் இருந்தால் C, D என்பவைகளின் உறுப்புக்களை எழுது.

1·6 **புள்ளிகளுக்கு இடையே உள்ள தூரம்:** புள்ளியை எண் இணைகளால் (Pair of numbers—ஜதை எண்களால்) குறிக்கும் வகையைக் கூறினோம். அதாவது வரைகணித மொழியில் புள்ளி எனப்படுவது, இப்புது முறையில் 'எண் இணை' என ஆயிற்று. இரண்டு புள்ளிகள் என்றால் இரண்டு ஜோடி எண்களாகும். இவ்வாறு அமையும் போது அப்புள்ளிகளுக் கிடையே உள்ள தூரத்தை அந்த இணை எண்களால் எவ்வாறு கூறுவது என்பதைப் பார்ப்போம்.

**இரு புள்ளிகளுக்கு இடையே உள்ள தூரம்.**




A $(x_1, y_1)$ ; B $(x_2, y_2)$ என்பன இரு புள்ளிகள்.
ABயைக் கணக்கிட

X அச்சுக்குக் குத்தாக AL, BM என்ற கோடுகள் வரை. BMக்குக் குத்தாக AN வரை.

$$\angle ANB = 90^\circ \quad \therefore \quad AB^2 = AN^2 + NB^2$$

ஆனால் $AN = LM = OM - OL = x_2 - x_1.$

$BN = MB - MN = MB - LA = y_2 - y_1$

$\therefore \quad AB^2 = (x_2 - x_1)^2 + (y_2 - y_1)^2$ அல்லது $(x_1 - x_2)^2 + (y_1 - y_2)^2$

குறிப்பு: *i* $OA^2 = x_1^2 + y_1^2$

*ii* $AB = \sqrt{(x_2 - x_1)^2 + (y_2 - y_1)^2}$

*iii* $OA = \sqrt{x_1^2 + y_1^2}$

புள்ளிகளை $(x_1\ y_1)$ ; $(x_2\ y_2)$ ; $(x_3\ y_3)$ ............ $(x_A\ y_A)$, $(x_B\ y_B)$, $(x_C\ y_C)$ ......... எனவும் குறிப்பது உண்டு.

புள்ளிகள் எந்தப் பிரிவில் இருப்பினும் இந்த சூத்திரம் பொருந்தும்.

மாதிரி: $(2, +4)$; $(-3, -7)$ என்ற புள்ளிகளுக்கு இடையே உள்ள தூரம் என்ன?

$A(2, 4)$; $B(-3, -7)$

$AB^2 = 5^2 + 11^2$

$= 25 + 121 = 146$

$\therefore\ AB = \sqrt{146}.$

[குறிப்பு: (*i*) கழித்தலே மனத்தில் செய்யவும். (*ii*) கழித்தல் விதியான, குறியை மாற்றிக் கூட்டும் முறையைப் பயன் படுத்தவும்.]

மாதிரி: $(2, 4)$; $(-6, -7)$; $(3, -2)$ என்ற புள்ளிகளை முனைகளாக உடைய முக்கோணம் எவ்வகை முக்கோணம்? அதன் சுற்றளவைக் கணக்கிடு.

$A\ (2, 4)$ $\quad AB^2 = 8^2 + 11^2 = 185$

$B\ (-6, -7)$

$C\ (3, -2)$ $\quad BC^2 = (-9)^2 + (-5)^2 = 106$

$A\ (2, 4)$ $\quad CA^2 = 1^2 + (-6)^2 = 37$

மிகப் பெரிய பக்கம் AB.

$AB^2 > BC^2 + CA^2 \quad \therefore\ \angle C$ விரிகோணம்

$\therefore$ இது அசமபக்க விரிகோண முக்கோணம்.

சுற்றளவு $= AB + BC + CA$

$= \sqrt{185} + \sqrt{106} + \sqrt{37}$

**குறிப்பு :** முக்கோணத்தின் மிகப் பெரிய பக்கத்தின் வர்க்கம் மற்ற இரு பக்கங்களின் வர்க்கங்களில் கூடுதலுக்கு,

அதிகமானல் ... ... விரிகோண △
சமமானல் ... ... செங்கோண △
குறைந்தால் ... ... குறுங்கோண △

## பயிற்சி 2

(1) மூலப்புள்ளியிலிருந்து கீழே தரப்படும் புள்ளிகளின் தூரங் களைக் கணக்கிடு.

(i) $(3, 4)$; (ii) $(-12, 5)$ (iii) $(-8, -6)$
(iv) $(-5, 3)$ (v) $(at^2, 2at)$ (vi) $\left(ct, \frac{c}{t}\right)$

(2) கீழே கொடுக்கப்பட்டுள்ள இரு புள்ளிகளுக்கிடையே உள்ள தூரத்தைக் கணக்கிடு.

(i) $(5, 2)$, $(9, 5)$ (ii) $(-4, 3)$; $(-8, 6)$
(iii) $(-6, 4)$, $(-3, 2)$ (iv) $(4, 3)$; $(-11, -2)$
(v) $(-a, -b)$ $(a, -b)$ (vi) $(2+\sqrt{3}, 5)$; $(2, 6)$

(3) பின்வரும் முக்கோணங்கள் எவ்வகையானவை?

(i) $(0, 0)$, $(2, 3)$, $(0, -1)$
(ii) $(6, 1)$, $(2, -5)$, $(8, -1)$
(iii) $(3, 7)$, $(-3, 2)$, $(4, -5)$

(4) பின்வரும் முக்கோணங்கள் இரு சமபக்க முக் கோணங்கள் என நிறுவு,

(i) $(4, 0)$, $(1, 4)$, $(5, 1)$
(ii) $(-5, 7)$ $(1, 4)$, $(-2, 1)$
(iii) $(-3, -7)$ $(-6, -3)$ $(-2, -6)$
(iv) $(-4, 6)$, $(2, 3)$, $(-1, 0)$

(5) பின்வருபவை இரு சமபக்க செங்கோண முக் கோணங்கள் என்று காட்டு.

(i) $(9, 5)$, $(-7, 1)$, $(3, -5)$
(ii) $(11, 7)$, $(-5, 3)$; $(5, -3)$
(iii) $(3, -1)$, $(-13, -5)$; $(-3, -11)$

1·7 இரண்டு புள்ளிகளைச் சேர்க்கும் நேர்கோட்டுத்துண்டை குறிப்பிட்ட விகிதத்தில் பிரிக்கும் புள்ளி.




A $(x_1\ y_1)$ ; B $(x_2\ y_2)$ என்பன இரு புள்ளிகள் P என்ன புள்ளி ABயை $m : n$ என்ற விகிதத்தில் பிரிக்கிறது. P என்ற புள்ளியின் உறுப்புக்களைக் காண.

P $(x_P\ y_P)$ என்க.

AL, BM, PN—இவைகளை X அச்சுக்குக் குத்தாக வரை.

$$\therefore \frac{LN}{NM} = \frac{AP}{PB}$$

$$\therefore \frac{x_P - x_1}{x_2 - x_P} = \frac{m}{n}$$

$$\therefore mx_2 - mx_P = nx_P - nx_1$$

$$\therefore x_P (m+n) = mx_2 + nx_1$$

$$\therefore x_P = \left(\frac{mx_2 + nx_1}{m + n}\right)$$

இதேபோல் $y_P = \left(\frac{my_2 + ny_1}{m + n}\right)$

∴ A $(x_1\ y_1)$ ; B $(x_2\ y_2)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் நேர்கோட்டுத்துண்டை $m : n$ என்ற விகிதத்தில் பிரிக்கும் புள்ளி யான Pயின் உறுப்புக்கள்

$$\left(\frac{mx_2 + nx_1}{m+n}\right), \quad \left(\frac{my_2 + ny_1}{m+n}\right) \text{ ஆகும்.}$$

**குறிப்பு :** (1) ABக்கு வெளியே P என்ற புள்ளி அமைந்தால் AP, PB என்ற கோட்டுத் துண்டங்கள் எதிரெதிர்த் திசைகளில் அமையும்.

∴ $\frac{AP}{PB}$ என்ற விகிதம் எதிரெண் ஆகும். அப்போது

விகிதத்தை $\frac{-m}{n}$ அல்லது $\frac{m}{-n}$ என்று குறிப்பிடலாம். மேற் கூறிய சூத்திரம் இதற்கும் பொருந்தும் (மாதிரிக் கணக்கைக் காண்க).







(2) ABயின் நடுப்புள்ளியாக P அமைந்தால் விகிதம் 1 : 1 ஆகும். அதாவது AP : PB = 1 : 1. ஆகவே, நடுப்புள்ளி $\frac{x_1 + x_2}{2}, \ \frac{y_1 + y_2}{2}$ ஆகிறது.

(3) சில கணக்குகளில் A, B, P என்ற புள்ளிகள் தரப்பட்டு $\frac{AP}{PB}$ என்ற விகிதம் கேட்கப்படும். அப்போது $\frac{AP}{PB} = \frac{k}{1}$ என்று கொள்வது நலம். அவ்வாறு கொண்டால் $x_P = \frac{kx_2 + x_1}{k+1}$ ; $y_P = \frac{ky_2 + y_1}{k+1}$ ஆகும். இதில் $k$ என்பது முழு எண், பின்னம், நேரெண், எதிரெண் – முதலியவைகளில் ஏதேனுமாகலாம்.

மாதிரி: A (− 4, 2); B (5, − 3) என்ற புள்ளிகளைச் சேர்க்கும் நேர்கோட்டுத்துண்டை 2 : 5 என்ற விகிதத்தில் உள்ளேயும், வெளியேயும் பிரிக்கும் புள்ளிகளைக் காண்க.

AB யை P என்ற புள்ளி உள்ளே 2 : 5 என்ற விகிதத்தில் பிரிக்கிறது என்க.

(i) AP : PB = 2 : 5

A(−4, 2)
B (5, −3)   விகிதம் 2 : 5

$$\therefore x_P = \frac{(2\times 5)+(5\times -4)}{2+5} = \frac{-10}{7}$$

$$y_P = \frac{(2\times -3)+(5\times 2)}{2+5} = \frac{4}{7}$$

$$\therefore P\left(\frac{-10}{7}, \frac{4}{7}\right)$$ ஆகும்.

(ii) AB ஐ 2 : 5 என்ற விகிதத்தில் வெளியே பிரித்தால்

$$\frac{AQ}{QB} = \frac{-2}{5}$$

A (−4, 2)
B (5, −3)   விகிதம் −2 : 5

$$\therefore x_Q = \frac{-10-20}{-2+5} = \frac{-30}{3} = -10$$

$$y_Q = \frac{6+10}{-2+5} = \frac{16}{3}$$

$$\therefore Q\left(-10, \frac{16}{3}\right)$$ ஆகும்.

### பயிற்சி 3

(1) பின் வரும் புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டுத்துண்டின் நடுப்புள்ளியைக் கண்டுபிடி.

(i) (4, 5), (2, 3)   (ii) (−5, 3), (−3, −7)

(iii) (8, −3), (3, 5)   (iv) (−7, −4), (−4, 7)

(v) (−11, 5), (11, 7)   (vi) (a, −b), (−a, b).

(2) (i) AB யின் நடுப்புள்ளி P (−3, 1). A (3, −2) என்றால் B ன் உறுப்புக்களைக் கண்டுபிடி.

(ii) (4, −7) என்பது AB யின் நடுப்புள்ளி. B (−7, 8) எனில் A யின் உறுப்புக்கள் என்ன?

*(iii)* BC யின் நடுப்புள்ளி $(-1, -3)$. $C(1, 1)$ எனில் B யைக் கண்டுபிடி.

(3) *(i)* PQ என்பது ஒரு வட்டத்தின் விட்டம். வட்ட மையம் $(1, -5)$. $P(7, -5)$ எனில் Q வைக் கண்டுபிடி.

*(ii)* $(-7, -11)$ ஐ மையமாக உடைய வட்டத்தில் $(-5, 0)$ என்புது ஒரு புள்ளி. அதன் வழியே செல்லும் விட்டத்தின் மற்ற முனையின் உறுப்புக்களைக் கணக்கிடு.

*(iii)* XY என்பது ஒரு வட்டத்தின் விட்டம். அதன் மையம் மூலப்புள்ளி. $X(3, -5)$ எனில் Y யைக் கண்டுபிடி.

(4) பின்வரும் புள்ளிகளைச் சேர்க்கும் கோடுகளைக் கொடுக்கப்பட்டுள்ள விகிதங்களில் பிரிக்கும் புள்ளிகளின் உறுப்புக்களைக் காணவும்.

| | A | B | விகிதம் | |
|---|---|---|---|---|
| *(i)* | $(3, 2)$ | $(1, 1)$ | $3:2$ | (உள்ளே) |
| *(ii)* | $(5, 2)$ | $(3, 7)$ | $4:5$ | ( ,, ) |
| *(iii)* | $(-5, 2)$ | $(3, -4)$ | $1:4$ | ( ,, ) |
| *(iv)* | $(8, 7)$ | $(1, 2\cdot5)$ | $2:3$ | ( ,, ) |
| *(v)* | $(0, -4)$ | $(-4, 0)$ | $2:7$ | ( ,, ) |
| *(vi)* | $(-5, 8)$ | $(2, -4)$ | $7:4$ | (வெளியே) |
| *(vii)* | $(-3, -9)$ | $(1, -1)$ | $2:5$ | ( ,, ) |
| *(viii)* | $(2\cdot5, -3)$ | $(-3, 2)$ | $3:4$ | ( ,, ) |
| *(ix)* | $(-5, -2)$ | $(0, 0)$ | $1:2$ | ( ,, ) |

(5) $P(3, 4)$ என்ற புள்ளி AB யை $3:4$ என்ற விகிதத்தில் உள்ளே பிரிக்கிறது. $A(5, 2)$ எனில் B யைக் காண்க.

(6) ABயை X அச்சு $2:3$ என்ற விகிதத்திலும் (உள்ளே); Y அச்சு அதே விகிதத்தில் வெளியேயும் பிரிக்கிறது. $A(3, -6)$ எனில் B யைக் கண்டுபிடி.

(7) $(-2, 5)$, $(8, -10)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் நேர் கோட்டுத் துண்டை *(i)* X அச்சு *(ii)* Y அச்சு எந்த விகிதங் களில் பிரிக்கும்?

(8) $(-1, 6)$, $(-16, 6)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டை $(-10, 12)$ என்ற புள்ளி என்ன விகிதத்தில் பிரிக்கிறது ?

(9) $(1, 4)$, $(9, -2)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டுத் துண்டை $(5, 1)$ என்ற புள்ளி என்ன விகிதத்தில் பிரிக்கிறது ?

(10) $(1, -1)$, $(7, -4)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டை $(-5, y_1)$ என்ன விகிதத்தில் பிரிக்கிறது? $y_1$ இன் மதிப்பு என்ன ?

**மாதிரி:** ஒரு நாற்கரத்தின் முனைகள் முறையே $(4, -1)$, $(1, -2)$, $(-2, 1)$ ; $(1, 2)$ என்ருல் அது ஒரு இணைகரம் என்று காட்டு.

புள்ளிகள் முறையே A $(4, -1)$; B $(1, -2)$; C $(-2, 1)$, D $(1, 2)$ என்க.

$$AC \text{ யின் நடுப்புள்ளி } = \left(\frac{4-2}{2}, \frac{-1+1}{2}\right) = (1, 0)$$

$$BD \text{ யின் நடுப்புள்ளி } = \left(\frac{1+1}{2}, \frac{-2, +2}{2}\right) = (1, 0)$$

AC, BD யின் நடுப்புள்ளி $(1, 0)$. அதாவது AC, BD என்ற மூலைவிட்டங்கள் ஒன்றையொன்று இருசமபாகங்களாக வெட்டிக் கொள்கின்றன. ∴ ABCD இணைகரம்.

**மாதிரி:** $(x_A, y_A)$, $(x_B, y_B)$; $(x_C, y_C)$; $(x_D, y_D)$ ABCD என்ற இணைகரத்தின் முனைகளாளுல் $x_A + x_C = x_B + x_D$ ஆகும்; $y_A + y_C = y_B + y_D$ ஆகும் என்று காட்டு.

ABCD என்பது ஒரு இணைகரம்.

∴ AC யின் நடுப்புள்ளியும், BD யின் நடுப்புள்ளியும் ஒன்றே.

$$AC \text{ யின் நடுப்புள்ளி } = \left(\frac{x_A + x_C}{2}, \frac{y_A + y_C}{2}\right)$$

$$BD \text{ யின் நடுப்புள்ளி } = \left(\frac{x_B + x_D}{2}, \frac{y_B + y_D}{2}\right)$$

இரண்டும் ஒரே புள்ளியாகையால்

$x_A + x_C = x_B + x_D$

$x_A + y_C = y_B + y_D$

**மறுதலை:** ABCD என்ற நாற்கரத்தில் எதிர்முனைகளின் $x$ உறுப்புக்களின் கூடுதல்களும், $y$ உறுப்புக்களின் கூடுதல்களும் சமமானல் ABCD இணைகரம் ஆகும்.

**மாதிரி:** ஒரு முக்கோணத்தின் பக்கங்களின் நடுப் புள்ளிகள் முறையே $(-2, -3)$, $(1, 5)$, $(-5, 2)$ எனில் முக்கோணத்தின் முனைகளைக் கண்டுபிடி.




△ன் முனைகள்

$A(x_A\ y_A)$; $B(x_B\ y_B)$ $C(x_C\ y_C)$ ஆகுக.

BCயின் நடுப்புள்ளி $D(-2-3)$

CAயின் நடுப்புள்ளி $E(1, 5)$

ABயின் நடுப்புள்ளி $F(-5, 2)$

AFDE ஒரு இணைகரம்

$\therefore x_A - 2 = -5 + 1 \quad \therefore x_A = -2$

$y_A - 3 = 2 + 5 \quad \therefore y_A = 10.$

$\therefore A(-2, 10)$ ஆகும்.

இதேபோல் BDEF இணைகரம்

$\therefore x_B + 1 = -5 - 2 \quad \therefore x_B = -8$

$y_B + 5 = 2, - 3 \quad \therefore y_B = -6$

$\therefore B(-8, -6)$

CEFD இணைகரம்

$\therefore x_C - 5 = -2 + 2 \quad \therefore x_C = 4$

$y_C + 2 = -3 + 5 \quad \therefore y_C = 0$

$\therefore C = (4, 0)$

$\therefore$ △ன் முனைகள் $(-2, 10)$; $(-8, -6)$; $(4, 0)$ ஆகும்.

## பயிற்சி 4

(1) நாற்கரத்தின் முனைகள் வரிசையாகத் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு நாற்கரமும் இணைகரம் என்று காட்டு.

(i) $(-3, 2)$, $(5, -4)$, $(-7, -8)$, $(-15, -2)$

(ii) $(1, 5)$, $(-2, -6)$, $(-5, 11)$, $(-2, 22)$

(iii) $(-10, 9)$, $(5, 6)$, $(12, -5)$, $(-3, -2)$

(iv) $(2, 2)$, $(5, 5)$, $(2, 4)$, $(-1, 1)$.

(2) ஒரு இணைகரத்தின் மூன்று முனைகள் வரிசையாகத் தரப்பட்டுள்ளன. நான்காவது முனையைக் கண்டுபிடி.

(i) $(5, 3)$, $(7, 2)$, $(-3, -2)$

(ii) $(3, -7)$, $(-2, -7)$, $(3, -8)$

(iii) $(-1, -2)$, $(2, -3)$, $(-2, 4)$

(iv) $(3, 4)$, $(7, 8)$, $(-5, 2)$

(3) ஒரு இணைகரத்தின் மூன்று முனைகள் $(6, 5)$, $(-2, -3)$, $(-10, 9)$ எனில் $(6, 5)$க்கு எதிராக உள்ள நான்காவது முனையைக் கண்டுபிடி.

(4) $(-2, -1)$, $(0, 0)$, $(5, 7)$ என்பன ஒரு இணைகரத்தின் மூன்று முனைகள். $(5, 7)$க்கு எதிராக உள்ள நான்காவது முனையைக் கண்டுபிடி.

(5) A, B, C முறையே $(5, -1)$, $(-2, -1)$, $(-5, -8)$ ஆகும். ABCX என்ற இணைகரத்தின் ஒரு மூலைவிட்டம் AC எனில் Xஐக் கண்டுபிடி. ACBY என்ற இணைகரத்தின் ஒரு மூலைவிட்டம் AB எனில் Yயைக் கண்டுபிடி.

6. $(2, 1)$, $(5, 4)$, $(1, 4)$ என்பவை ஒரு இணைகரத்தின் மூன்று முனைகள் $(2, 1)$ என்ற முனைக்கு எதிராகவுள்ள நான்காவது முனையைக் கண்டுபிடி. (M.U.)

**1·8 ஒரு முக்கோணத்தின் மையக் கோட்டுச் சந்தி (Centroid of a triangle)** ஒரு முக்கோணத்தின் ஒரு முனையை அதன் எதிர்ப்பக்கத்தின் நடுப்புள்ளியுடன் சேர்க்கும் நேர்கோடு, மையக்கோடு அல்லது நடுக்கோடு எனப்படும். ஒரு முக்கோணத்திற்கு மூன்று நடுக்கோடுகள் உண்டு. இம்மூன்று கோடுகளும்

ஒரு புள்ளி வழியே செல்பவையாகும். அந்தப் புள்ளிக்கு மையக் கோட்டுச் சந்தி என்று பெயர்.

ABC என்ற முக்கோணத்தில் D என்பது BC யின் நடுப்புள்ளி யானல் G என்ற மையக் கோட்டுச் சந்தி AD யை 2 : 1 என்ற விகிதத்தில் பிரிக்கும். அதாவது AG : GD = 2 : 1 ஆகும்.

A $(x_1\ y_1)$, B $(x_2\ y_2)$, C $(x_3\ y_3)$ என்ற முக்கோணத்தின் மையக் கோட்டுச் சந்தியைக் கண்டுபிடி :

BC யின் நடுப்புள்ளி D $(x_D\ y_D)$ ஆகுக.

$$\therefore\ 2x_D = x_2 + x_3$$

மையக் கோட்டுச் சந்தி G $(x_g\ y_g)$ ஆனது A $(x_1\ y_1)$ D $(x_D\ y_D)$ யை 2 : 1 என்ற விகிதத்தில் உள்ளே பிரிக்கிறது.

$$\therefore\ x_g = \frac{2x_D + x_1}{2+1} = \frac{x_2 + x_3 + x_1}{3}$$

$$= \frac{x_1 + x_2 + x_3}{3}$$

இதேபோல

$$y_g = \frac{y_1 + y_2 + y_3}{3}$$

$\therefore\ \triangle$ A$(x_1\ y_1)$ B$(x_2\ y_2)$ C$(x_3\ y_3)$ ன் மையக் கோட்டுச் சந்தி $\left(\frac{x_1 + x_2 + x_3}{3}, \frac{y_1 + y_2 + y_3}{3}\right)$ ஆகும்.

## பயிற்சி 6

(1) பின்வரும் முனைகளையுடைய முக்கோணங்களின் மையக் கோட்டுச் சந்திகளைக் காணவும்.

(i) $(-3, -2)$, $(8, -5)$, $(7, -3)$

(ii) $(-5, 4)$, $(-3, -7)$, $(3, -8)$

(iii) $(-1, 3)$, $(6, 2)$, $(4, -8)$

(2) $(3, -8)$, $(-5, 2)$ என்பன ஒரு முக்கோணத்தின் இருமுனைகளாகும். அதன் மையக் கோட்டுச் சந்தி மூலப் புள்ளி யானல் மூன்றாவது முனையைக் கண்டுபிடி.

(3) ஒரு முக்கோணத்தின் மையக் கோட்டுச் சந்தி $(-1, 2)$ அதன் இரண்டு முனைகள் $(3, -11)$, $(-13, -5)$ எனில் மூன்றாவது முனை என்ன ?

4. ஒரு முக்கோணத்தின் முனைகள் $(3, -4)$, $(-12, 5)$, $(9, -1)$ முனைகளிலிருந்து மையக் கோட்டுச் சந்தியின் தூரங்களைக் கணக்கிடு.

(5) ஒரு முக்கோணத்தின் இரண்டு பக்கங்களின் நடுப் புள்ளிகள் $(-3, 1)$, $(5, -4)$. முக்கோணத்தின் மையக் கோட்டுச் சந்தி மூலப்புள்ளியானால் முக்கோணத்தின் முனைகளைச் கண்டுபிடி.

### 1·9 முக்கோணத்தின் பரப்பு :

$A(x_1\ y_1)$, $B(x_2\ y_2)$ என்றால் $\triangle$ OAB யின் பரப்பு X அச்சுக்கு AL, BM என்ற குத்துக்கோடுகள் வரை.




$$OM = x_2 ; \quad OL = x_1$$

$$\therefore \quad ML = (x_1 - x_2)$$

$$MB = y_2 ; \quad LA = y_1$$

$\triangle$ AOB யின் பரப்பு $= \triangle OMB + MBAL - \triangle OLA$

$= \frac{1}{2} OM \cdot MB + \frac{1}{2} ML(MB+LA) - \frac{1}{2} OL \cdot LA$

$= \frac{1}{2} \{ x_2 y_2 + (x_1 - x_2)(y_2 + y_1) - x_1 y_1 \}$

$= \frac{1}{2} \{ x_1 y_2 - x_2 y_1 \}$

**குறிப்பு:** $x_1 y_2 - x_2 y_1$ என்பதை $\begin{vmatrix} x_1 & y_1 \\ x_2 & y_2 \end{vmatrix}$ என்றும் குறிக்கலாம்.

**A $(x_1\ y_1)$ B $(x_2\ y_2)$ C $(x_3\ y_3)$ எனில் $\triangle$ ABC யின் பரப்பு.**




$\triangle ABC = \triangle OAB + \triangle OBC + \triangle OCA$

மேலே உள்ள சூத்திரத்தின்படி.

$\triangle ABC = \frac{1}{2}(x_1 y_2 - x_2 y_1)$

$+$

$\frac{1}{2}(x_2 y_3 - x_3 y_1)$

$+$

$\frac{1}{2}(x_3 y_1 - x_1 y_3)$

$= \frac{1}{2} [ (x_1 y_2 - x_2 y_1)$

$+ (x_2 y_3 - x_3 y_1)$

$+ (x_3 y_1 - x_1 y_3) ]$




**குறிப்பு :** △ ABC = △ OAB + △ OBC + △ OCA என்பது எல்லாப் படங்களுக்கும் பொருந்தும். ஆனால், பரப்பும் நேரெண்ணாகவும், எதிரெண்ணாகவும் இருக்க முடியும் என்பது அறியத் தக்கது. இடமாகச் சுற்றி (Anticlock wise) வரும்போது ஏற்படும் பரப்பு நேரெண்ணாகவும், வலமாகச் சுற்றி (clock wise) வரும் போது ஏற்படும் பரப்பு எதிரெண்ணாகவும் இருக்கும். படம் (ii)ல் OAB, OBC என்பவை நேரெண்ணாகும், △ OCA எனும் பரப்பு வலமாகச் சுற்ற வருவதால் எதிரெண்ணாகும்.

∴ OAB + OBC + OCA = △ ABC ஆகிறது.

**குறிப்பு 2 :** ஒரு முக்கோணத்தின் பரப்பு O என வந்தால் மூன்று புள்ளிகளும் ஒரே நேர்கோட்டில் அமையும் என்பதை உணர்க.

**குறிப்பு 3 :** நாற்கரம் ABCD யின் பரப்பை மேற்கூறியவாறே காணலாம்.

நாற்கரம் ABCD = △ OAB + △ OBC + △ OCD + △ ODA. ஆனால் AB, BC, CD, DA என்ற பக்கங்கள் ஒன்றை யொன்று வெட்டாமலும், சாதாரணமான குவிநாற்கரமாகவும் அமைய வேண்டும்.




நாற்கரத்தின் நான்கு முனைகள் தரப்பட்டால், அவைகளைத் துணைப் படத்தில் குறித்துப் பிறகு குவிநாற்கரமாக இருக்குமாறு முனைகளை வரிசையாக அமைக்க வேண்டும். (மாதிரியைக் காண்க).

**குறிப்பு 4:** முக்கோணத்தின் முனைகள் சாதாரண எண்களால் தரப்பட்டால் கீழே விவரிக்கப்படும் முறையைக் கையாளலாம்.

*(i)* புள்ளிகளின் பெயர்களையும், அவற்றின் உறுப்புக்களையும் கீழ்க்கண்டவாறு எழுது.

| | | |
|---|---|---|
| A | $(x_1 \quad y_1)$ | |
| B $x_2 y_1$ | $(x_2 \quad y_2)$ | $x_1 y_2$ |
| C $x_3 y_1$ | $(x_3 \quad y_3)$ | $x_2 y_3$ |
| A $x_1 y_3$ | $(x_1 \quad y_1)$ | $x_3 y_1$ |
| (II) | | (I) |

*(ii)* அம்புக் குறிகள் இணைக்கும் எண்களின் பெருக்கற் பலனைக் குறித்தபடி இரண்டு கலங்களில் எழுதவும்.

*(iii)* △ன் பரப்பு $= \frac{1}{2}$ [ முதற் கலத்தின் கூடுதல் — இரண்டாவது கலத்தின் கூடுதல் ]

**குறிப்பு 5:** மேற்கூறிய முறையை நாற்கரத்திற்கோ அல்லது வேறு மற்ற குவிப்பலகோணத்திற்கோ – பரப்பைக் கண்டு பிடிக்கக் கையாளலாம்.

**மாதிரி:** ஒரு முக்கோணத்தின் முனைகள் $(-5, 7), (2, -8), (3, 1)$ எனில் அதன் பரப்பைக் கண்டுபிடி.

| | | | |
|---|---|---|---|
| A | | $(-5, \ 7)$ | |
| B | 14 | $(2, \ -8)$ | 40 |
| C | $-24$ | $(3, \ 1)$ | 2 |
| A | $-5$ | $(-5, \ 7)$ | 21 |
| (II) | $-15$ | | 63 (I) |

$\therefore$ △ன் பரப்பு $= \frac{1}{2}(63 + 15) = 39$ ச. அலகுகள்.

**மாதிரி:** ஒரு நாற்கரத்தின் முனைகள் $(-3, -1), (3, 1), -4, 6), (4, -6)$ எனில் அதன் பரப்பைக் கண்டுபிடி.



∴ துணைப்படத்தில் புள்ளிகளைக் குறித்தால் $(-3, -1)$, $(4, -6)$, $(3, 1)$, $(-4, 6)$ என்ற வரிசையில் புள்ளிகளைச் சேர்க்கப் பரப்பு கிடைக்கும்.

| | | | |
|---|---|---|---|
| A | | $(-3, -1)$ | |
| B | $-4$ | $(4, -6)$ | $18$ |
| C | $-18$ | $(3, 1)$ | $4$ |
| D | $-4$ | $(-4, 6)$ | $18$ |
| A | $-18$ | $(-3, -1)$ | $4$ |
| | $-44$ | | $44$ |

∴ பரப்பு $= \frac{1}{2}(44 + 44) = 44$ ச. அலகுகள்.

## பயிற்சி 7

(1) கீழ்க்கண்ட முக்கோணங்களின் பரப்பைக் கண்டுபிடி.

(i) $(3, -5)$, $(5, 8)$, $(-2, 3)$

(ii) $(8, -5)$, $(-6, -3)$, $(-2, 4)$

(iii) $(-5, 3)$, $(-5, -7)$, $(7, -4)$

(iv) $(8, -2)$, $(-3, 5)$, $(3, 5)$.

(2) கீழே தரப்பட்டுள்ள மூன்று புள்ளிகளாலான முக்கோணங்களின் பரப்பைக் கண்டுபிடி. அப்புள்ளிகள் ஒரே நேர்கோட்டில் அமையும் என்று காட்டு.

(i) $(3, 7)$, $(7, -5)$, $(10, -14)$

(ii) $(-5, 12)$, $(7, -8)$, $(4, -3)$

(iii) $(a + b, c)$; $(c + a, b)$; $(b + c, a)$

(3) $A(3, 5)$ $B(-3, -3)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் நேர்கோட்டிலிருந்து மூலப்புள்ளியின் தூரத்தைக் கணக்கிடு. [AB யின் தூரத்தையும், $\triangle$ OAB யின் பரப்பையும் கண்டு விடையைக் காணவும்].

(4) $(-3, 2)$, $(1, 5)$, $(6, -7)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் குத்துயரங்களைக் கணக்கிடு.

(5) ஒரு முக்கோணத்தின் பரப்பு 64 ச. அலகுகள். $(12, 8)$, $(4, -8)$ என்பவை முக்கோணத்தின் இருமுனைகள். மூன்றாவது முனை $x$ அச்சில் உள்ளது எனில் அதன் உறுப்புக்கள் என்ன?

(6) கீழ்க்கண்ட புள்ளிகளை முனைகளாகவுடைய நாற்கரத்தின் பரப்பைக் கணக்கிடு.

(i) $(-4, 3)$, $(-5, -7)$, $(7, -4)$ $(3, 8)$

(ii) $(5, -3)$ $(-7, 8)$ $(-3, -1)$ $(8\ 1)$

1.10 **நேர் கோட்டின் சரிவு** (Gradient of the straight line)

**சாய்வும் சரிவும் :** AB என்ற நேர்கோடு X'OX என்ற X அச்சுடன் $\theta$ ('தீடா' என்று உச்சரிக்கவும்) என்ற கோணத்தை இடமாக உண்டாக்கட்டும்.




$\theta$ என்ற கோணம் A B என்ற நேர் கோட்டின் சாய்வு (Inclination) எனப்படும்.

**குறிப்பு :** X'RB என்ற கோணம் சாய்வு ஆகாது. X'OX என்ற திசையிலிருந்து AB என்ற திசை இடமாகத் திரும்பி வந்தால் சாய்வு நேரெண் ஆகும். வலமாகத் திரும்பினுல் சாய்வு எதிரெண்ணுகும்.

**சரிவு :** சாய்வுக் கோணத்தின் டான் விகிதம் (Tangent) சரிவு (gradient or slope) எனப்படும். இங்கு சரிவு $= \tan \theta$.

**குறிப்பு:** சாய்வு என்பது கோணமாகும். சரிவு என்பது ஒரு விகிதம். அது வெற்று எண்.

A $(x_1\ y_1)$ B $(x_2\ y_2)$ வழியே செல்லும் நேர் கோட்டின் சரிவு: AL, BM என்ற குத்துக் கோடுகளை X அச்சுக்கு வரை. AN என்பது BM க்குக் குத்துக் கோடு.

$$AN = (x_2 - x_1) \quad ; \quad NB = (y_2 - y_1)$$

$$\angle NAB = \angle MRB = \theta \quad \text{(ஒத்த கோணங்கள்)}$$

$\therefore$ ABயின் சரிவு $= \tan\theta = \tan\angle NAB$

$$= \frac{BN}{AN}$$

$$= \frac{y_2 - y_1}{x_2 - x_1}$$

$\therefore$ A $(x_1\ y_1)$, B $(x_2\ y_2)$ வழியே செல்லும் நேர் கோட்டின் சரிவு $\frac{y_2 - y_1}{x_2 - x_1}\left(\text{அல்லது } \frac{y_1 - y_2}{x_1 - x_2}\right)$ ஆகும்.

இரண்டு புள்ளிகள் வழியே செல்லும் நேர்கோட்டின் சரிவு $\Big\}$ $= \dfrac{y \text{ உறுப்புக்களின் வித்தியாசம்.}}{x \text{ உறுப்புக்களின் வித்தியாசம்.}}$

இங்கு 'சரிவு' என்பது நேர்கோட்டின் திசையைத் தருகிறது. இந்தச் சூத்திரம் Aயிலிருந்து B அமையும் திசையைத் தருகிறது.

### பயிற்சி 8

(டான் விகிதப் பட்டியலை வேண்டுமிடத்துப் பயன்படுத்தவும்)

1. நேர் கோடுகளின் சாய்வுகள் தரப்பட்டுள்ளன. அவைகளின் சரிவுகளைக் கண்டுபிடி.

$45°, 60°, 30°, 135°, -45°, -30°, 38°, 65°, 122°\ 142°, 116°, -75°$

2. நேர் கோடுகளின் சரிவுகள் தரப்பட்டுள்ளன. சாய்வுகளைக் கண்டுபிடி.

$\sqrt{3},\ 1,\ \frac{1}{\sqrt{3}}, -1,\ 1{\cdot}567\ -{\cdot}3678,\ 0$

3. இரண்டு கோடுகளின் சாய்வுகள் தரப்பட்டுள்ளன. துணைப்படம் வரைந்து அவைகளுக்கிடையே உள்ள கோணத்தைக் கண்டுபிடி.

$45^\circ, 35^\circ$ ; $45^\circ, 30^\circ$ ; $60^\circ, 45^\circ$ ; $90^\circ, 112^\circ$ ; $52^\circ, 142$ ; $30^\circ, -28^\circ$.

4. கீழ்க்கண்ட பட்டியலைப் பூர்த்திசெய்.

| | A | B | ABயின் சரிவு |
|---|---|---|---|
| i. | $(3, 5)$ | $(7, 8)$ | ......... |
| ii. | $(-2, -3)$ | $(-5, 2)$ | ......... |
| iii. | $(3, -6)$ | $(-3, 4)$ | ......... |
| iv. | $(0, 0)$ | $(-5, -5)$ | ......... |
| v. | $(-2, -3)$ | $(3, -5)$ | ......... |
| vi. | $(0, 0)$ | $(x_1\ y_1)$ | ......... |
| vii. | $(-g, -f)$ | $(-g^1, -f^1)$ | ......... |
| viii. | $(at_1^2\ 2at_1)$ | $(at_2^2, 2at_2)$ | ......... |

1.11 **இணை கோடுகள்:** ABயும் CDயும் இணை கோடுகளானால் அவை X அச்சுடன் சமமான கோணங்களில் சாய்ந்திருக்கும்.

∴ ABயின் சரிவு = CDயின் சரிவு. மறுதலையாக, AB, CD என்ற இரு கோடுகளின் சரிவுகள் சமமானால் அவை ஒன்றுக்கொன்று இணையாக இருக்கும்.

**குறிப்பு 1.** A, B, C என்பவை ஒரு கோட்டிலமையும் புள்ளிகளானால் AB, BC, CA என்ற கோடுகள் யாவும் ஒன்றே. ஆகையால் அவைகளின் சரிவுகளும் ஒன்றே.

∴ ABயின் சரிவு = BCயின் சரிவு.

**குறிப்பு 2.** மறுதலையாக ABயின் சரிவும், BCயின் சரிவும் ஒன்றேயானால் A, B, C என்பன ஒரே நேர்கோட்டிலமையும் புள்ளிகளாகும்.

$A(x_1\ y_1)$ ; $B(x_2\ y_2)$, $C(x_3\ y_3)$ ஆகுக.

$$\therefore \quad AB \text{ யின் சரிவு } = \frac{y_2 - y_1}{x_2 - x_1}$$

$$BC \text{ யின் சரிவு } = \frac{y_3 - y_2}{x_3 - x_2}$$

1. $\frac{y_2 - y_1}{x_2 - x_1} = \frac{y_3 - y_2}{x_3 - x_2}$ எனில் A, B, C ஒரே நேர் கோட்டில் அமையும்.

2. $AB : BC = \frac{y_2 - y_1}{y_3 - y_2}$ அல்லது $\frac{x_2 - x_1}{x_3 - x_2}$

மாதிரி : A (2, 5) B (4, 6) C (8, 8) என்பவை ஒரே நேர் கோட்டில் அமைபவை என்று காட்டு. அவ்வாறெனில் AB : BC எவ்வளவு?

$$\text{சரிவு } AB = \frac{6 - 5}{4 - 2} = \frac{1}{2}$$

$$\text{சரிவு } BC = \frac{8 - 6}{8 - 4} = \frac{1}{2}$$

சரிவு AB = சரிவு BC. ∴ A, B, C ஒரே நேர் கோட்டில் அமையும்.

$$\frac{AB}{BC} = \frac{6 - 5}{8 - 6} = \frac{1}{2}$$

## பயிற்சி 9

1. கீழே தரப்பட்டுள்ள புள்ளித் தொகுதிகள் ஒரே நேர் கோட்டில் அமையும் என்று காட்டு.

i. (3, 4), (7, 8), (8, 9)

ii. (– 2, – 3), (2, – 11) ; (– 1, – 5)

iii. (– 5, 1), (3, – 3·8), (– 2, – ·8)

iv. $\left(\frac{1}{3}, \frac{11}{7}\right)$ ; (4, 0) ; $\left(0, \frac{12}{7}\right)$

2. நாற்கரங்களின் முனைகள் வரிசையில் தரப்பட்டுள்ளன. இவை டிரெபீஸியங்கள் என்று நிரூபி.

i. $(4,-1)$, $(1,-2)$, $(-2, 1)$ ; $(-5, 0)$

ii. $(-10, 9)$, $(5, 6)$ ; $(12,-5)$ ; $(-3, -2)$

iii. $(2, 2)$ ; $(5, 5)$ ; $(2, 4)$ ; $(5, 3)$

**1·12 குத்துக் கோடுகள் :** AB யும் CD யும் ஒன்றுக்கொன்று குத்தாக உள்ள கோடுகள்.




AB யின் சாய்வு $= \theta$

$\therefore$ CD யின் சாய்வு $= 90 + \theta$

$\therefore$ CD யின் சரிவு $= \tan \theta$

$= \tan (90 + \theta)$

$= \dfrac{-1}{\tan \theta}$

$= \dfrac{1}{\text{AB யின் சரிவு}}$

$\therefore$ AB யின் சரிவு $\times$ CD யின் சரிவு $= -1$.

$\therefore$ இரண்டு கோடுகள் ஒன்றுக்கொன்று குத்துக் கோடுகள் ஆனல் அவற்றின் சரிவுகளின் பெருக்கற் பலன் $-1$ ஆகும்.

AB ⊥ CD. AB யின் சரிவு $= -\frac{a}{b}$ எனில் CD யின் சரிவு $= \frac{b}{a}$ ஆகும். (அதாவது மாறுபட்ட குறியை உடைய தலைகீழ்ப்பின்னம் ஆகும் – Reciprocal with the sign changed).

**மாதிரி:** ஒரு முக்கோணத்தின் முனைகள் $(8, -10)$, $(0, -4)$, $(7, -2)$ எனில், அது செங்கோண முக்கோணம் என்று காட்டு.

A $(8, -10)$

சரிவு AB $= \frac{6}{8} = \frac{3}{4}$

B $(0, -4)$

சரிவு BC $= \frac{1}{7} = \frac{1}{7}$

C $(7, -3)$

சரிவு CA $= \frac{7}{-1} = -7$

A, $(8, -10)$

சரிவு BC × சரிவு CA $= -1$ ∴ BC ⊥ CA.

∴ $\angle C = 90°$ ∴ ABC செங்கோண முக்கோணம்.

**மாதிரி:** $(0, -2)$, $(5, 1)$, $(2, 6)$, $(-3, 3)$ என்ற புள்ளிகளை வரிசையாக எடுத்துக்கொண்டால், அவை ஒரு சதுரத்தின் முனைகள் என்று காட்டு. [M.U.]

சதுரம் என்பது *(i)* ஒரு இணைகரம் *(ii)* அதில் இரண்டு அண்டைப்பக்கங்கள் குத்தாக இருக்கவேண்டும். *(iii)* மூலை விட்டங்களும் குத்தாக அமைய வேண்டும்.

A $(0, -2)$

சரிவு AB $= \frac{-3}{-5} = \frac{3}{5}$

B $(5, 1)$

சரிவு BC $= \frac{-5}{3} = \frac{-5}{3}$

C $(2, 6)$

சரிவு CD $= \frac{3}{5} = \frac{3}{5}$

D $(-3, 3)$

சரிவு DA $= \frac{5}{-3} = \frac{-3}{5}$

A $(0, -2)$

சரிவு AB = சரிவு CD

சரிவு BC = சரிவு AD $\therefore$ ABCD ஒரு இணைகரம் *(i)*

சரிவு AB $\times$ சரிவு BC $= \frac{3}{5} \times \frac{-5}{3} = -1$ $\therefore$ AB $\perp$ BC *(ii)*

சரிவு AC $= \frac{-8}{-2} = 4;$

சரிவு BD $= \frac{2}{-8} = -\frac{1}{4}$

சரிவு AC $\times$ சரிவு BD $= 4 \times \frac{-1}{4}$ $\therefore$ AC $\perp$ BD *(iii)*

$\therefore$ ABCD சதுரமாகும்.

[குறிப்பு: இரண்டு புள்ளிகளுக்கு இடையிலுள்ள தூரத்தைக் கண்டுபிடிக்கும் சூத்திரத்தைப் பயன்படுத்தியும் இக்கணக்கைச் செய்யலாம்].

## பயிற்சி 10

1. $(5, 2)$, $(6, -15)$ என்ற புள்ளிகள் மூலப்புள்ளியில் செங்கோணத்தைத் தாங்குகின்றன என்று காட்டு.

2. கீழே முக்கோணங்களின் முனை தரப்பட்டுள்ளன. அவை செங்கோண முக்கோணங்களை அடைக்கும் என்று காட்டு.

*(i)* $(1, 2)$, $(2, 3)$, $(-1, 4)$

*(ii)* $(4, -1)$, $(5, 0)$, $(2, 1)$

*(iii)* $(-10, 8)$; $(-3, 7)$, $(-4, 0)$

*(iv)* $(-9, 9)$, $(-2, 8)$, $(-3, 1)$

3. ஒரு நாற்கரத்தின் முனைகள் முறையே $(5, -1)$, $(11, 7)$, $(8, 10)$, $(2, 4)$. இது செவ்வகம் என்று காட்டு.

4. $(1, -10)$, $(-5, 2)$, $(15, 12)$, $(21, 0)$ என்பவைகளை முனைகளாக உடைய நாற்கரம் செவ்வகம் ஆகும்.

5. $(-2, 2)$, $(0, 4)$, $(-2, 6)$, $(-4, 4)$ என்பவைகளை வரிசையாகச் சேர்க்கக் கிடைக்கும் உருவம் சதுரம் என்று நிரூபி.

6. கீழே தரப்பட்ட நான்கு புள்ளிகளும் சதுரத்தின் முனைகள் என்று காட்டு.

$(2, 5)$, $(4, 7)$, $(2, 9)$, $(0, 7)$.

## முதல் அத்தியாயத்தின் சுருக்கம்

1. **புள்ளி:** ஒரு ஜோடி எண்களால் தரப்படுகிறது. ஆகவே புள்ளி என்றால் ஒரு ஜோடி எண்கள் ஆகும். ஒரு ஜோடி எண்களே புள்ளி என உருவகப்படுத்தலாம்.

2. **இரண்டு புள்ளிகள்:** $A(x_1\, y_1)$, $B(x_2\, y_2)$ என்பவை இரண்டு புள்ளிகளானால்

(i) $AB^2 = (x_1 - x_2)^2 + (y_1 - y_2)^2$

(ii) AB யின் நடுப்புள்ளி $\left(\frac{x_1 + x_2}{2}, \frac{y_1 + y_2}{2}\right)$

(iii) AB யை $m : n$ என்ற விகிதத்தில் பிரிக்கும் புள்ளி

$$\left(\frac{mx_2 + nx_1}{m + n}, \frac{my_2 + ny_1}{m + n}\right)$$

(iv) $k : 1$ என்ற விகிதத்தில் பிரிக்கும் புள்ளி

$$\left(\frac{kx_2 + x_1}{k + 1}, \frac{ky_2 + y_1}{k + 1}\right)$$

3. $A(x_1\, y_1)$ $B(x_2\, y_2)$ $C(x_3\, y_3)$ எனில் முக்கோணம் ABC யின் பரப்பு $= \frac{1}{2}\sum(x_1 y_2 - x_2 y_1)$.

4. $A(x_1\, y_1)$, $B(x_2\, y_2)$ வழியே செல்லும் கோட்டின் சரிவு

$$\frac{y_2 - y_1}{x_2 - x_1} \text{ அல்லது } \frac{y_1 - y_2}{x_1 - x_2}.$$

5. (i) சரிவு AB = சரிவு CD எனில் AB || CD.

(ii) சரிவு AB = சரிவு BC எனில் A, B, C ஒரே நேர் கோட்டில் அமையும்.

(iii சரிவு AB $= \dfrac{-1}{\text{சரிவு CD}}$ எனில் AB ⊥ CD.

## சோதனைத்தாள் 1

(1) ஒரு முக்கோணத்தின் முனைகள் $(1, -1)$, $(4, 3)$, $(-3, 2)$. அதன் சுற்றளவு என்ன? அது எவ்வகை முக்கோணம்?

(2) $(-2, 1)$, $(1, 0)$, $(4, 3)$, $(1, 2)$ என்பவை ஒரு இணைகரத்தின் முனைகள் எனக்காட்டு. மூலை விட்டங்களின் நீளங்களைக் கணக்கிடு.

(3) ஒரு இணைகரத்தின் மூன்று முனைகள் $(2, -2)$, $(-3, -5)$, $(0, 1)$. அதன் நான்காவது முனை $(0, 1)$ க்கு எதிராக அமைந்தால் அதன் உறுப்புக்கள் என்ன ?

(4) $(-1, 5)$, $(5, -6)$ என்ற புள்ளிகளுக்கிடையே உள்ள தூரத்தை (i) X அச்சு (ii) Y அச்சு எந்த விகிதங்களில் பிரிக்கின்றன ?

(5) A $(1, 4)$, B $(3, -2)$, C $(-3, 16)$ என்ற புள்ளிகள் ஒரு கோட்டமைவன எனக்காட்டு. AB : BC யைக் கணக்கிடு.

(6) $(-5, 1)$ $(-2, 6)$, $(3, 3)$ என்ற புள்ளிகள் ஒரு செங்கோண முக்கோணத்தின் முனைகள் எனக் காட்டு.

## சோதனைத்தாள் 2

(1) $(-3, 2)$ என்ற புள்ளியை மையமாக உடைய வட்டத்தில் $(-7, 5)$, $(-8, 2)$, $(1, -1)$, $(-3, 3)$ என்ற புள்ளிகள் அமைகின்றன என்று காட்டு. வட்டத்தின் ஆரத்தைக் கணக்கிடு.

(2) ஒரு முக்கோணத்தின் பக்கங்களின் நடுப் புள்ளிகள் $(4, 2)$, $(-4, 6)$, $(-2, -8)$ என்றால் அதன் முனைகளைக் கண்டுபிடி.

(3) $(8, b)$ என்ற புள்ளி $(-13, -1)$, $(-6, 0)$ என்ற புள்ளிகள் வழியே செல்லும் கோட்டில் அமைகிறது என்றால் $b$ யின் மதிப்பு என்ன ? $(8, b)$ என்ற புள்ளி மற்ற இரு புள்ளிகளுக் கிடையே யுள்ள தூரத்தில் எந்த விகிதத்தில் பிரிக்கிறது ?

(4) $(2, 1)$; $(-4, -8)$; $(0, -2)$; $(1, -\frac{1}{2})$ என்ற புள்ளிகள் ஒரு கோட்டமைவன என்று காட்டு.

(5) $(1, -2)$, $(6, 1)$, $(3, 6)$, $(-2, 3)$ என்ற புள்ளிகள் ஒரு சதுரத்தின் முனைகள் என்று நிரூபி.

## சோதனைத்தாள் 3

(1) ஒரு வட்டத்தின் விட்டத்தின் முனைகள் $(-4, 6)$, $(8, 1)$ ஆனால், விட்டத்தின் நீளம் என்ன? வட்டத்தின் மையத்தையும் காண்க.

(2) $(-5, -8)$, $(-2, 3)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டுத் துண்டை $(1, 14)$ என்ற புள்ளி என்ன விகிதத்தில் பிரிக்கிறது.

(3) $(4, -2)$ $(8, 7)$, $(-5, 1)$, $(-3, -2)$ எனும் புள்ளிகள் ஒரு நாற்கரத்தின் முனைகளென்றால் அதன் பரப்பைக் காணவும்.

(4) $(3, 5)$, $(-2, -1)$, $(-5, 7)$ என்ற மூன்று புள்ளிகள் ஒரு இணைகரத்தின் முனைகளென்றால் நான்காவது முனையின் உறுப்புக்கள் என்ன?

# 2. வரையின் சமன்பாடு

2.1 **சமன்பாட்டின் வரைப்படம்:** தளத்தில் உள்ள ஒரு புள்ளியை இரட்டை எண்களால் குறிக்கும் ஒரு வகையைக் கூறினோம். அந்த ஜோடி எண்கள் ஒன்றுக்கொன்று குறிப்பிட்ட தொடர்புடையனவானால் அவைதரும் புள்ளிகள் எவ்வாறு அமைகின்றன என்று பார்ப்போம். $x, y$ என்ற இரு எண்களிடையே உள்ள தொடர்பு $f(x, y) = 0$ என்ற சமன்பாட்டால் தரப்படும். அதாவது ஒரு எண் மற்றதைச் சார்ந்து நிற்கிறது என அறிகிறோம்.

எடுத்துக்காட்டாக $y = 2x + 1$ என்ற சமன்பாட்டை எடுத்துக் கொள்வோம். $x$க்கு நம் இச்சைப்படி மதிப்புகள் கொடுக்கலாம். ஆனால் $y$ன் மதிப்பு சமன்பாட்டுக்கு — அதன் விதிக்கு — அடங்கினதாய் இருக்கவேண்டும். அத்தகைய எண் இணைகளைக் கீழ்க் கண்ட அட்டவணையில் அமைப்போம்.

| $x$ | $-3$ | $-2$ | $-1$ | $0$ | $1$ | $2$ | $3$ | $4$ |
|---|---|---|---|---|---|---|---|---|
| $y$ | $-5$ | $-3$ | $-1$ | $1$ | $3$ | $5$ | $7$ | $9$ |

[பின்னங்களையும் மதிப்பாகத் தரலாம்]

மேலே ஒன்றன் கீழ் ஒன்றாக எழுதப்பட்டுள்ள இணை எண்கள் மேற்கூறிய தொடர்புடையன. இப்புள்ளிகளைப் படத்தில் குறிப்போம். அப்புள்ளிகள் ஒழுங்காக ஒரு நேர்கோட்டில் அமைவதைக் காணலாம். இந்த நேர்கோடு சமன்பாட்டின் வரைப்படம் எனப்படும்.




இதனல் நாம் அறிவது :

(i) சமன்பாட்டிற்கு அடங்கிய ஜோடி எண்கள் தரும் புள்ளிகள் வரைப்படத்தில் அமைகின்றன.

(ii) வரைப்படத்தில் எந்தப் புள்ளியை எடுத்துக் கொண்டாலும் அவற்றின் உறுப்புக்கள் சமன்பாட்டிற்கு அடங்கியவை.

(iii) சமன்பாட்டிற்கு அடங்காத எண் ஜோடிகள் தரும் புள்ளிகள் வரைப்படத்தில் அமையா.

அதாவது $f(a, b) = 0$ எனில் $(a, b)$ என்ற புள்ளி $f(x, y) = 0$ என்ற சமன்பாட்டின் வரைப்படத்தில் அமையும்.

**குறிப்பு :** $f(x, y) = 0$ என்ற சமன்பாட்டின் வரைப்படம் என்று கூறுவதற்குப் பதிலாக $f(x, y) = 0$ என்ற வரை என்றே கூறுவோம்.

**மாதிரி 1 :** $(1, 2)$, $(2, -5)$, $(3, 7)$ என்ற புள்ளிகளில் எவை $x^2 + xy + 2y^2 = 44$ என்ற வரையில் அமையும் ?

சமன்பாடு $f(x, y) \equiv x^2 + xy + 2y^2 - 44 = 0$

(i) $f(1, 2) \equiv 1 + 2 + 8 - 44 \neq 0$

$\therefore$ $(1, 2)$ வரையில் அமைவதில்லை.

(ii) $f(2, -5) = 4 - 10 + 50 - 44 = 0$

$\therefore$ $(2, -5)$ சமன்பாட்டிற்கு அடங்கியது.

(iii) $f(3, 7) = 9 + 21 + 98 - 44 \neq 0$

$\therefore$ $(3, 7)$ வரையில் அமைவதில்லை.

**மாதிரி 2 :** $x^2 - 3xy + x^3 + 8 = 0$ என்ற சமன்பாட்டில் அமையும் ஒரு புள்ளியின் $y$ உறுப்பு $-2$ எனில் $x$ உறுப்பு என்ன ?

$x$ உறுப்பு $x_1$ ஆகுக.

$\therefore$ புள்ளி $(x_1, -2)$ வரையில் அமைகிறது.

$$\therefore \quad x_1^2 - 6x_1 - 8 + 8 = 0$$

$$x_1^2 + 6x_1 = 0$$

$$x_1(x_1 + 6) = 0$$

$\therefore$ $x_1 = 0$ அல்லது $-6$

$\therefore$ $x$ உறுப்பு $0$ அல்லது $-6$ ஆகும். [$y$ உறுப்பு $-2$ ஆக உள்ள புள்ளிகள் இரண்டு வரையின் மேல் உள்ளன. அதில் ஒன்று $y$ அச்சின் மேல் அமைகிறது].

**மாதிரி 3 :** புள்ளி $(7t + 1, 3t - 1)$ என்பது $8x - 7y + 5 = 0$ என்ற சமன்பாட்டின் வரைப்படத்தில் அமைந்தால் அப்புள்ளியைக் கண்டுபிடி.

$(7t + 1)$, $(3t - 1)$ என்பது சமன்பாட்டிற்கு அடங்கிய எண் ஜோடிகள். $\therefore$ பிரதியிட

$$8(7t + 1) - 7(3t - 1) + 5 = 0$$

$$56t + 8 - 21t + 7 + 5 = 0$$

$44t + 22 = 0$

$\therefore \quad t = -\frac{1}{2}$

$\therefore$ புள்ளி $= \left( -\frac{5}{2}, -\frac{5}{2} \right)$

## பயிற்சி 11

(1) கீழே தரப்பட்டவைகளில் எவையெவை $x^2 + y^2 = 25$ என்ற சமன்பாட்டின் வரைபடத்தில் அமையும்?

$(3, 2)$; $(4, 3)$, $(-4, 3)$, $(7, 1)$,

$(0, 5)$; $(0, -5)$, $(\sqrt{21}, 2)$, $(\sqrt{13}, \sqrt{12})$.

(2) $(2, 8)$ என்ற புள்ளி $xy = c^2$ என்ற வரையில் அமைகிறது. $c$ யின் மதிப்பு என்ன?

(3) $[(5t - 4), (t + 1)]$ என்ற புள்ளி $7x = 4y - 1$ என்ற வரையில் அமைந்தால் புள்ளியைக் கண்டுபிடி.

(4) $(3, -5)$, $(-2, 1)$ என்ற புள்ளிகள் $y = mx + c$ என்ற வரையில் அமைவதாயின், $m, c$ யின் மதிப்புக்களைக் காண்க.

5. $lx + my = 1$ என்ற சமன்பாட்டின் வரைபடம் $(1, -2)$, $(4, 0)$ என்ற புள்ளிகள் வழியே செல்வதாயின் $l, m$ ன் மதிப்புக்களைக் கண்டுபிடி?

(6) $\frac{x^2}{a^2} + \frac{y^2}{b^2} = 1$ என்ற வரையில் $(1, -2)$; $(2, -3)$ என்ற புள்ளிகள் அமைந்தால் $a, b$ ன் மதிப்புக்கள் என்ன?

(7) $x^2 + y^2 + 2gx + 2fy + c = 0$ என்ற வரையில் கீழே கொடுக்கப்பட்டுள்ள புள்ளிகள் அமைகின்றன என்றால் $g, f, c$ யின் மதிப்புக்களைக் கண்டுபிடி.

(i) $(6, 0)$, $(0, 8)$, $(0, 0)$

(ii) $(3, -4)$, $(-2, 1)$, $(-3, -1)$

(iii) $(2, 3)$, $(4, -3)$, $(5, -2)$

**2·2 வரையின் சமன்பாடு :** $x, y$ என்ற இணை எண்களின் தொடர்பை $f(x, y) = 0$ என்ற சமன்பாடு தருகிறது. அத்தகைய எண் ஜோடிகள் தரும் புள்ளிகள் ஒழுங்காக ஒரு வரையில் அமைகின்றன என்று கூறினேம்.

இந்நூலில் சில விதிகளுக்கு உட்பட்டு ஒழுங்காக அமையும் புள்ளித் தொகுதிகளில், புள்ளிகளின் எண்கள் எத்தகைய தொடர்புடையன என்பதைக் காண்போம்.

சிலவிதிகளுக்குக் கட்டுபட்டு அமையும் புள்ளித் தொகுதிக்கு (set of points) வரை என்று பெயர். விதிக்கேற்ப வரைகளுக்கும் பெயர்கள் உண்டு. எடுத்துக் காட்டாக ஒரு நிலையான புள்ளியிலிருந்து ஒரே தூரத்தில் அமையும் புள்ளிகள் சேர்ந்த தொகுதி (புள்ளியின் நியமப்பாதை) **வட்டம்** எனப்படும். அந்த நிலையான புள்ளி வட்டத்தின் **மையம்** எனவும், அந்த தூரம் வட்டத்தின் **ஆரம்** எனவும் அழைக்கப்படும். இவ்வாறு புள்ளிகள் ஒவ்வொன்றும் ஒரே நியமத்திற்கு உட்பட்டு இருந்தால், அவற்றின் $x, y$ உறுப்புக்கள் ஒரே தொடர்பு உடையனவாக இருக்கும். இத்தொடர்பைத் தரும் சமன்பாட்டுக்கு **வரையின் சமன்பாடு** (Equation of the curve) என்று பெயர்.

[ 'புள்ளி' என்றுல் எவ்வாறு ஒரு 'ஜோடி எண்கள்' என்று சொல்லுகிருேமோ, அதேபோல வரை என்றுல் '$f(x, y) = 0$ என்ற சமன்பாடு' என்று உருவகப் படுத்துவோம்].

**ஒரு வரையின் சமன்பாட்டைக் காண :**

(i) $P(x, y)$ என்பது ஒரு விதிக்கு உட்பட்டு அமையும் புள்ளிகளில் ஒன்று எனக் கொள்க.

(ii) முதல் அத்தியாயத்தில் கண்ட சூத்திரங்களைப் பயன்படுத்தி $(x, y)$ என்ற எண்களின் தொடர்பைக் காண்க. 'விதி'யில் தூரம், சரிவு அல்லது திசை, கோணம், பரப்பு ஆகியவை வரும். இவைகளுக்கேற்ற சூத்திரங்களில் $f(x, y) = 0$ என்ற சமன்பாட்டை வரவழைக்கவும்.

(iii) வரையில் உள்ள ஒவ்வொரு புள்ளியும் அதே நியமத்திற்கு உட்பட்டதால் ஒவ்வொன்றின் ஜோடி எண்களும் இதே தொடர்பையுடையனவாக இருக்கும். ஆகவே $f(x, y) = 0$ என்பது வரையின் சமன்படு ஆகும்.

**குறிப்பு :** விதி அல்லது நியமத்திற்குட்பட்ட புள்ளித் தொகுதி என்று கூறுவதற்குப் பதிலாக ஒரு நியமத்திற்கு உட்பட்டு இயங்கும் புள்ளியின் பாதை (Locus of a point) அல்லது ஒரு புள்ளியின் இயங்கு வரை அல்லது நியமப் பாதை என்று கூறுவது வழக்கம். புள்ளியின் ஒவ்வொரு நிலையும் (position) $(x, y)$ என்ற எண்களால் தரப்படும். இத்தகைய எண்களின் தொடர்பு நியமப் பாதையின் சமன்பாடு எனப்படும்.

**மாதிரி :** ஒரு வரையில் அமையும் புள்ளிகள் ஒவ்வொன்றின் $x$ அச்சிலிருந்து உள்ள தூரம், $(O, a)$ என்ற புள்ளியிலிருந்து உள்ள தூரத்திற்குச் சமம் எனில் அதன் சமன்பாடு என்ன?

புள்ளி $P(x\ y)$ ஆகுக. X அச்சிலிருந்து தூரம் $y$. $(O, a)$ யிலிருந்து தூரம் $\sqrt{x^2 + (y-a)^2}$

$$\therefore \sqrt{x^2 + (y-a)^2} = y$$

$$\therefore x^2 + (y-a)^2 = y^2$$

$$\therefore x^2 - 2ay + a^2 = 0$$ என்பதுதான் வரையின் சமன்பாடு.

**மாதிரி:** ஒரு வட்டத்தின் விட்டத்தின் முனைகள் $A(x_1\ y_1)$, $B(x_2\ y_2)$ ஆகும். வட்டத்தின் சமன்பாடு என்ன? இங்கு நியதி வெளிப்படையாகத் தரப்படவில்லை.

$P(x, y)$ என்பது வட்டத்தில் ஏதேனும் ஒரு புள்ளியானல், $AP \perp BP$ என்பதுதான் விதி.

$$\therefore \text{சரிவு } AP \times \text{சரிவு } BP = -1$$

$$\therefore \frac{y - y_1}{x - x_1} \cdot \frac{y - y_2}{x - x_2} = -1.$$

$$\therefore (x - x_1)(x - x_2) + (y - y_1)(y - y_2) = 0$$

என்பதுதான் $A(x_1\ y_1)$ $B(x_2\ y_2)$ என்ற விட்டத்தையுடைய வட்டத்தின் சமன்பாடு ஆகும்.

### பயிற்சி 12

1. $(-1, 0)$ $(2, 3)$ என்ற இரு புள்ளிகளிலிருந்து சம தூரத்தில் இயங்கும் புள்ளியின் நியமப் பாதையின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

2. $(-1, -2)$ என்ற புள்ளியிலிருந்து 5 அலகு தூரத்தில் இயங்கும் புள்ளியின் நியமப் பாதையின் சமன்பாடு என்ன ?

3. ஒரு வட்டத்தின் மையப் புள்ளி $(h, k)$. அதன் ஆரம் $a$ அலகு. வட்டத்தின் சமன்பாடு என்ன ?

4 $(2, 3)$, $(-4, 2)$ஐ முனைகளாகவுடைய விட்டத்தைக் கொண்ட வட்டத்தின் சமன்பாடு என்ன ?

5. ஒரு புள்ளி $y$ அச்சிலிருந்து உள்ள தூரத்தைப்போல், R மடங்கு இருக்குமாறு நகருகிறது. அதன் நியமப் பாதையின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

6. A $(2, 3)$ B $(-1, 2)$ என்பவை இரு புள்ளிகள். முக்கோணம் APB யின் பரப்பு 20 ச. அலகுகள் இருக்குமாறு P என்ற புள்ளி நகருகிறது. அதன் நியமப் பாதையின் சமன்பாடு $x - 5y + 27 = 0$ அல்லது $x - 5y = 13$ என்று காட்டு.

# 3. நேர் கோடு

**3.1 A $(x_1\ y_1)$ என்ற புள்ளி வழியாக சரிவு '$m$' ஆக இருக்கும் நேர் கோட்டின் சமன்பாடு :**

P $(x, y)$ என்பது அந்த நேர் கோட்டில் ஒரு புள்ளி ஆகுக.

சரிவு AP $= m$ ...... (கொள்கை) ஆனல் சரிவு AP $= \frac{y-y_1}{x-x_1}$

$$\therefore \frac{y-y_1}{x-x_1} = m$$

$\therefore$ $m$ என்ற சரிவுடன் A $(x_1\ y_1)$ வழியே செல்லும் நேர் கோட்டின் சமன்பாடு $y - y_1 = m\ (x - x_1)$ ஆகும்.

**குறிப்பு 1.** புள்ளி A $(o, c)$ ஆனல் நேர் கோட்டின் சமன்பாடு $y - c = m\ (x - o)$

$$\therefore \quad y \quad = \quad mx + c$$

இந்த சமன்பாட்டில் $m$ என்பது நேர் கோட்டின் சரிவு என்றும் $c$ என்பது நேர்கோடு $y$ அச்சை மூலப் புள்ளியிலிருந்து வெட்டும் தூரம் என்பதும் உணர்க. இதற்கு நேரடியான நிரூபணம் கீழே தரப்படுகிறது.

**மாதிரி:** $2x - 3y + 8 = 0$ என்ற சமன்பாட்டை 'சரிவு உருவத்தில்' மாற்றி நேர் கோட்டின் சரிவையும், அது $y$ அச்சை வெட்டும் புள்ளி, மூலப் புள்ளியிலிருந்து எவ்வளவு தூரத்தில் உள்ளது என்றும் கண்டுபிடி.

$$2x - 3y + 8 = 0$$

$$\therefore \quad 3y \quad = \quad 2x + 8$$

$$\therefore \quad y \quad = \quad \frac{2}{3}x + \frac{8}{3}$$

$\therefore$ நேர் கோட்டின் சரிவு $= \frac{2}{3}$

அது $y$ அச்சை வெட்டும் புள்ளி, மூலப் புள்ளியிலிருந்து உள்ள தூரம் $\frac{8}{3}$ அலகு.

**3.2 நேர் கோட்டின் சமன்பாட்டை $y = mx + c$ என்ற வடிவத்தில் காண:**

நேர் கோட்டின் சரிவு $m$ ஆகுக: அது $y$ அச்சை A எனும் புள்ளியில் வெட்டட்டும் OA = C ஆகுக. P $(x, y)$ நேர்கோட்டில் ஏதேனும் ஒரு புள்ளி ஆகுக. PM, $x$ அச்சுக்குக் குத்தாகுக. AR எனும் கோடு PM க்குக் குத்தாகுக.




$$\therefore \quad AR = OM = X$$

$$RP = MP - MR = MP - OA = y - c$$

கோட்டின் சாய்வு, அதாவது $x$ அச்சுடன் ஏற்படும் கோணம் $\theta$ என்றால் சரிவு $m = \tan\theta$ ஆனால் RAP $= \theta$

$$\therefore \quad \tan\theta = \frac{RP}{AR}$$

$$\therefore \quad m = \frac{y - c}{x}$$

$$\therefore \quad mx = y - c$$

$$\therefore \quad y = mx + c$$

என வருகிறது. ஆகவே ஒரு நேர்கோட்டின் சரிவு, $m$ எனவும், $y$ அச்சில் அது வெட்டும் துண்டு $c$ எனவும் ஆனால் அதன் சமன்பாடு $y = mx + c$ ஆகும்.

**குறிப்பு:** $y = mx + c$ என்ற சமன்பாட்டில் $m = 0$ ஆனல் $y = c$ எனச் சமன்பாடு வருகிறது; $m = 0$ என்ருல் கோடு $x$ அச்சுக்கு இணையாகும்; $y = c$ என்பது




படம் i

$x$ அச்சுக்கு இணையாக, $x$ அச்சிலிருந்து '$c$' தூரத்தில் உள்ள நேர் கோட்டின் சமன்பாடாகும். அதாவது இந்த நேர் கோட்டில் உள்ள புள்ளிகளின் $x$ உறுப்புக்கள் ஏதாயினும் $y$ உறுப்பு மாருமல் '$c$' ஆகவே இருக்கிறது. (படம் i பார்க்கவும்) $c$யும் $0$ ஆனல் சமன்பாடு $y = 0$ என ஆகிறது. ஆகவே $y = 0$ என்பது $x$ அச்சின் சமன்பாடாகும்.




படம் ii

இதேபோல $x = a$ என்பதன் பொருள், $y$ உறுப்பு ஏதாயினும், புள்ளியின் $x$ உறுப்பு '$a$' என்பதாகும். (படம் ii பார்க்கவும்) இது $y$ அச்சுக்கு '$a$' தூரத்தில் உள்ள இணை கோட்டைக் குறிக்கிறது. ஆகவே $x = 0$ என்பது $y$ அச்சின் சமன்பாடாகும்.

### பயிற்சி 13

1. கீழேயுள்ள சமன்பாடுகள் தரும் கோடுகளின் சரிவுகளைக் கண்டுபிடி.

(i) $y = 3x + 5$ (v) $4y = 8x - 3$

(ii) $y = 2x + 8$ (vi) $5y = 7x - 8$

(iii) $y = x - 10$ (vii) $4x - 3y + 5 = 0$

(iv) $y = \frac{3}{4}x + \frac{4}{5}$ (viii) $x + 4y = 8$

2. நேர்கோட்டின் சரிவும், கோட்டில் அமைந்துள்ள ஒரு புள்ளியும் தரப்பட்டுள்ளன. நேர்கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

| புள்ளி : | $(2, 5)$ | $(-5, -3)$ | $(4, -3)$ | $(0, -3)$ | $(0, 0)$ |
|---|---|---|---|---|---|
| சரிவு : | $3$ | $\frac{4}{3}$ | $-\frac{2}{3}$ | $-\frac{8}{7}$ | $m$ |

### 3·3 இரண்டு புள்ளிகள் வழியே செல்லும் நேர் கோட்டின் சமன்பாடு.

A $(x_1\ y_1)$ B $(x_2\ y_2)$ என்பவை இரு புள்ளிகள். P $(x, y)$ என்பது AB என்ற நேர் கோட்டில் உள்ள ஒரு புள்ளி.

$\therefore$ சரிவு AP = சரிவு AB

$$\therefore \quad \frac{y - y_1}{x - x_1} = \frac{y_2 - y_1}{x_2 - x_1}$$

இதுதான் தேவையான சமன்பாடு ஆகும். இதை

$$\frac{x - x_1}{x_2 - x_1} = \frac{y - y_1}{y_2 - y_1}$$ எனவும் எழுதலாம்.

**3·4 நேர் கோட்டின் சமன்பாட்டை $\frac{x}{a} + \frac{y}{b} = 1$ எனும் வடிவத்தில் காண:**




நேர்கோடு $x$ அச்சை A யிலும், $y$ அச்சை B யிலும் வெட்டட்டும். OA $= a$, OB $= b$ ஆகுக. P $(x, y)$ நேர் கோட்டில் ஏதேனும் ஒரு புள்ளியாகுக: PM, $x$ அச்சுக்குக் குத்தாகவும் PN, $y$ அச்சுக்குக் குத்தாகவும் வரைக.

$$\therefore \quad PN = x; \quad PM = y$$

$$\triangle \; OAP + \triangle \; OPB = \triangle \; OAB$$

$$\therefore \quad \tfrac{1}{2} OA \cdot MP + \tfrac{1}{2} OB \cdot PN = \tfrac{1}{2} OA \cdot OB$$

$$\therefore \quad \tfrac{1}{2}\, a \cdot y + \tfrac{1}{2}\, b \cdot x = \tfrac{1}{2}\, a\, b$$

$$\therefore \quad b\,x + a\,y = a\,b$$

$ab$ஆல் வகுக்க $\therefore \quad \frac{x}{a} + \frac{y}{b} = 1$

**குறிப்பு:** இதை 3 · 3இல் கண்ட பொதுச் சூத்திரத்தி லிருந்தும் காணலாம்; A $(a,o)$ B $(o,b)$ என்பவை புள்ளிகளானல் சமன்பாடு $\frac{x - a}{o - a} = \frac{y - o}{b - o}$

$$\therefore \quad bx - ab = -ay$$

$$\therefore \quad bx + ay = ab$$

$$\therefore \quad \frac{x}{a} + \frac{y}{b} = 1.$$

$\therefore$ நேர்கோடு $x$ அச்சில் $a$ அலகு நீளமுள்ள துண்டையும் $y$ அச்சில் $b$ அலகு நீளமுள்ள துண்டையும் வெட்டினால் அந்நேர்கோட்டின் சமன்பாடு $\frac{x}{a} + \frac{y}{b} = 1$ ஆகும் என்று தெரிகிறது.

## பயிற்சி 14

1. சூத்திரத்தைப் பயன்படுத்தாமல் அடிப்படை மூலம் கீழ்க்கண்ட புள்ளிகள் வழியே செல்லும் நேர்கோடுகளின் சமன் பாடுகளைக் கண்டுபிடி.

(i) $(2, 5)$, $(7, 3)$ (ii) $(-3, -2)$, $(4, -7)$

(iii) $(-3, -4)$, $(-5, -3)$ (iv) $(1, 2)$, $(0, 0)$

(v) $(-3, -8)$ $(3, 8)$ (vi) $(5, -4)$, $(-5, 4)$.

2. $x$ அச்சு, $y$ அச்சு இவைகளை மூலப்புள்ளியிலிருந்து நேர் கோடு வெட்டும் தூரம் தரப்பட்டுள்ளது. நேர்கோட்டின் சமன் பாட்டை எழுது.

$(5, 7)$ ; $(-5, -8)$ ; $\left(\frac{5}{3}, -\frac{9}{4}\right)$

$\left(-\frac{3}{2}, \frac{7}{3}\right)$; $\left(-\frac{3}{7}, -\frac{2}{3}\right)$

### 3·7 நேர் கோட்டுச் சமன்பாட்டின் பொது உருவம்.

ஒரு புள்ளியும் அதன் வழியே செல்லும் நேர்கோட்டின் திசையும் தரப்பட்டால், அதன் சமன்பாடு என்ன என்பதைக் கண்டோம். அவ்வாறே இரண்டு புள்ளிகள் வழியே செல்லும் நேர்கோட்டின் சமன்பாட்டையும் கண்டோம். நேர்கோட்டில் அமையும் புள்ளிகள் யாவும் ஒரு புள்ளியிலிருந்து ஒரே திசையில் அமைபவை என்பதைப் பயன்படுத்தி, சமன்பாட்டைக் கண்டோம். இது நேர்கோட்டிற்கே உரிய தனிப்பண்பு ஆகும். இப்படிக் காணப்பட்ட சமன்பாடுகள் $x$, $y$ல் ஒருபடிச் சமன்பாடுகளாக இருப்பதையும் அறிகிறோம்.

மறுதலையாக, ஒவ்வொரு ஒருபடிச் சமன்பாட்டின் வரைப் படமும் நேர்கோடுகள் ஆகும் என்பதைக் காண்போம்.

**$ax + by + c = 0$ என்ற சமன்பாடு ஒரு நேர்கோடாகும்.**

**நிரூபணம் :** A $(x_1 y_1)$ B $(x_2\ y_2)$ என்ற இரு புள்ளிகளும் $ax + by + c = 0$ என்ற சமன்பாடு தரும் வரையில் அமையட்டும்.

$\therefore\ ax_1 + by_1 + c = 0.$

$\therefore\ ax_2 + by_2 + c = 0.$

$\therefore\ a(x_1 - x_2) + b(y_1 - y_2) = 0$

$$\therefore\ \frac{y_1 - y_2}{x_1 - x_2} = -\frac{a}{b}.$$

$\therefore$ சரிவு AB $= -\dfrac{a}{b}\cdot$

$\therefore$ Aயிலிருந்து Bயின் திசையானது B வரையில் எங்கிருப்பினும் மாறுவதில்லை.

$\therefore$ புள்ளி B, $-\dfrac{a}{b}$ என்ற சரிவையுடைய நேர்கோட்டில் இருக்கவேண்டும்.

$\therefore$ $ax + by + c = 0$ என்பது $-\dfrac{a}{b}$ என்ற சரிவையுடைய நேர்கோட்டின் சமன்பாடாகும்.

**மறுதலை :** $-\dfrac{a}{b}$ என்ற சரிவையுடைய கோட்டின் சமன்பாடு $ax + by + c = 0$ ஆகும்.

கோடு $(x_1\ y_1)$ வழியே செல்வதாக இருந்தால்

$ax_1 + by_1 + c = 0 \qquad \therefore\ -c = ax_1 + by_1.$

$\therefore$ கோட்டின் சமன்பாடு $ax + by = -c.$

அதாவது $ax + by = ax_1 + by_1$

$\therefore$ $(x_1\ y_1)$ என்ற புள்ளி வழியாக $-\dfrac{a}{b}$ என்ற சரிவில் செல்லும் கோட்டின் சமன்பாடு $ax + by = ax_1 + by_1$.

[ ஒரு நேர்கோட்டின் சமன்பாடு எழுத இதுவே எளிய முறையாகும். ஒரு புள்ளியும், சரிவும் கண்டுபிடித்து சமன்பாட்டை உடனே எழுதலாம் ].

**மாதிரி :** (*i*) $-\frac{2}{3}$ என்ற சரிவுடன் $(1, 2)$ என்ற புள்ளி வழியே செல்லும் கோட்டின் சமன்பாடு ,

$$2x + 3y = (2 \times 1) + 3(2)$$

அதாவது $2x + 3y = 8$

(*ii*) $\frac{4}{5}$ என்ற சரிவுடன் $(-1, 5)$ என்ற புள்ளி வழியே செல்லும் கோட்டின் சமன்பாடு

$$4x - 5y = 4 \times (-1) - (5 \times 5)$$

அதாவது $4x - 5y = -29.$

**மாதிரி:** A $(-3, -4)$, B $(-1, 5)$ என்ற புள்ளிகள் வழியே செல்லும் கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

$\mathbf{A} = (-3, -4)$ ; B $= (-1, 4)$

$\therefore$ சரிவு AB $= \frac{-9}{-2} = \frac{9}{2}$.

$\therefore$ சமன்பாடு $9x - 2y = 9 \times -3 - 2 \times (-4)$

அதாவது $9x - 2y = -19.$

## பயிற்சி 15

1. நேர்கோட்டில் அமையும் புள்ளியும் சரிவும் தரப் பட்டுள்ளன. சமன்பாட்டை எழுது.

| | புள்ளி | சரிவு | | புள்ளி | சரிவு |
|---|---|---|---|---|---|
| *i.* | $x_1 y_1$ | $-\frac{a}{b}$ | *vi.* | $(-1, -2)$ | $-\frac{7}{2}$ |
| *ii.* | $(2, 3)$ | $-5/6$ | *vii.* | $(-3, 0)$ | $\frac{5}{3}$ |
| *iii.* | $(3, -1)$ | $\frac{2}{3}$ | *viii.* | $(\frac{1}{2}, \frac{3}{4})$ | $-3$ |
| *iv.* | $(-4 -5)$ | $5$ | *ix.* | $(at^2, 2at)$ | $\frac{1}{t}$ |
| *v.* | $(1, 0)$ | $-3$ | | | |

2. கீழே தரப்பட்டுள்ள புள்ளிகள் வழியே செல்லும் நேர் கோட்டின் சமன்பாடுகளைக் கண்டுபிடி.

(i) $(2, 3), (5, 4)$ (vi) $(3, -5), (5, -5)$

(ii) $(1, 9), (5. 3)$ (vii) $(5, 2), (5, -3)$

(iii) $(4, -2), (-8, 5)$ (viii) $(t_1^2\ 2t_1)\ (t_2^2, 2t^2)$

(iv) $(-6, -1), (7, 2)$ (ix) $\left(t_1, \frac{1}{t_1}\right), \left(t_2, \frac{1}{t_2}\right)$

(v) $(0, 0), (5, -4)$.

3·5 ஒரு நேர்கோட்டின் சமன்பாடு

$x \cos a + y \sin a = p$ எனவும் அமையும்.




$x'Ox$, $y'Oy$ எனும் ஒன்றற்கொன்று குத்துக்கோடுகள், முறையே $x, y$ அச்சுக்களாகுக. AB என்பது ஒரு நேர்கோடு ON என்பது ABக்குக் குத்துக்கோடு. அதன் நீளம் $ON = p$ ஆகுக. அதன் சாய்வு '$a$' ஆகுக. $P(x, y)$ என்பது AB எனும் நேர்கோட்டில் ஏதேனும் ஒரு புள்ளி. $(x, y)$ என்ன தொடர்பில் அமைகிறதோ அதுவே நேர்கோட்டின் சமன்பாடாகும்.

$OP = r$ ஆகுக ; $\angle XOP = \theta \quad \therefore \quad x = r \cos \theta ; y = r \sin \theta$

ஆனால் $OP \cos (a - \theta) = p$

$\therefore \quad r \cos (a - \theta) = p$

$\therefore \quad r \cos \theta \cos a + r \sin \theta \sin a = p$

$\therefore \quad x \cos a + y \sin a = p$

என $(x, y)$ இடையேயுள்ள தொடர்பு வருகிறது.

$\therefore$ ABயின் சமன்பாடு

$x \cos \alpha + y \sin \alpha = p$ எனவாகிறது.

3.6 நேர்கோட்டின் துணை அலகுச் சமன்பாடு (Parametric equation of the straight line): $x' O x$; $y' O y$ என்பவை




அச்சுக்கோடுகள். A $(x_1\ y_1)$ என்பது ஒரு புள்ளி A வழி $\theta$ சாய்வில் AP எனும் கோடு உள்ளது. P $(x, y)$ என்பது நேர் கோட்டில் ஒரு புள்ளி. $AP = r$ ஆகுக. AR, PR, $x$, $y$ அச்சுக் களுக்கு இணைகோடுகள் $\therefore \angle ARP' = 90°$

$$AR = (x - x_1) \qquad RP = (y - y_1)$$

ஆனால் $AR = AP \cos \theta \qquad RP = AP \sin \theta$

$$\therefore \quad x - x_1 = r \cos \theta \qquad y - y_1 = r \sin \theta$$

$$\therefore \quad x = x_1 + r \cos \theta \qquad y = y_1 + r \sin \theta$$

இவ்வாறு P யின் $(x, y)$ உறுப்புக்கள் தனித்தனியே '$r$'இன் சார்பலனாகத் தரப்படுகிறது. இவ்வாறு $(x, y)$ உறுப்புக்கள் தனித்தனியே மற்றொரு மாறி (variable) யின் சார்பலனாகத் தரப் பட்டால் (அதாவது நேரடியாகத் தொடர்பு தரப்படாமல்) அத்தகைய சமன்பாடு வரையின் துணை அலகுச் சமன்பாடு எனப் படும். '$x$', $y$ இவை '$r$' எனும் எண்ணால் அளக்கப்படுவதால் '$r$' துணைஅலகு (Parameter) எனப் பெயர்பெற்றது.

மாதிரி : A $(x_1\ y_1)$ என்ற புள்ளிவழி '$\theta$' சாய்வில் செல்லும் ஒரு கோடு $ax + by + c = 0$ என்ற கோட்டை N எனும் புள்ளியில் வெட்டுகிறது. AN இன் அளவைக் காணவும்.

A $(x_1\ y_1)$ வழி '$\theta$' சாய்வில் செல்லும் கோட்டின் துணை அலகுச் சமன்பாடு $x = x_1 + r\cos\theta$

$$y = y_1 + r\sin\theta$$

இந்தக்கோடு $ax + by + c = 0$ என்ற கோட்டை வெட்டும் புள்ளி N இன் தூரத்தை A யிலிருந்து கணக்கிட, $(x, y)$ க்குப் பிரதியிடவும்.

$$\therefore\ a(x_1 + r\cos\theta) + b(y_1 + r\sin\theta) + c = 0$$

$$\therefore\ r(a\cos + b\sin\theta) = -(ax_1 + by_1 + c)$$

$$\therefore\ AN = r = -\frac{(ax_1 + by_1 + c)}{a\cos\theta + b\sin\theta}$$

மாதிரி : $(4_1\ 1)$ என்ற புள்ளிவழிச் செல்லும் ஒரு கோடு $3x - y = 0$ என்ற கோட்டை, $\frac{11\sqrt{2}}{4}$ தூரத்தில் வெட்டுகிறது எனில் கோட்டின் சாய்வு என்ன? (M.U.)

மேல் சூத்திரத்தில் $a = 3;\ b = -1\ \ x_1 = 4_1\ y_1 = 1\ r = \frac{11\sqrt{2}}{4}$ பிரதியிட $\frac{11\sqrt{2}}{4} = -\frac{(12 - 1)}{3\cos\theta - \sin\theta}$

$$\therefore\ 3\cos\theta - \sin\theta = \frac{-4}{\sqrt{2}}$$

$\therefore\ \theta = 135°$ என்பது ஒரு மதிப்பு [சமன்பாட்டைப் பார்த்ததில் இது தெரிகிறது]. ஆகவே ஒரு கோட்டின் சாய்வு 135°

மாதிரி : $y = \frac{3}{4}x + 1$ என்ற நேர் கோட்டின் சமன்பாட்டை '$r$' துணை அலகுச் சமன்பாட்டு வடிவத்தில் எழுதவும். துணை அலகுச்சமன்பாடு

$$x = x_1 + r\cos\theta$$

$$y = y_1 + r\sin\theta$$

ஆகும். இதில் $(x_1\ y_1)$ நேர்கோட்டில் அமையும் புள்ளி; '$\theta$' கோட்டின் சாய்வு.

$(0, 1)$ என்பது $y = \frac{3}{4}x + 1$ என்ற கோட்டில் ஒரு புள்ளி. அதன் சரிவு $\tan\theta = \frac{3}{4}$

$$\therefore \quad \sin\theta = \frac{3}{5}; \quad \cos\theta = \frac{4}{5}$$

$\therefore$ கோட்டின் துணை அலகுச் சமன்பாடு

$$x = x_1 + r\cos\theta \qquad \therefore \quad x = \frac{4}{5}r$$

$$y = y_1 + r\sin\theta \qquad y = 1 + \frac{3}{5}r$$

### பயிற்சி 16

1. கீழ்க்கண்ட கோடுகளைத் துணைஅலகுச் சமன்பாட்டில் எழுதவும்.

(i) $y = x + 3$ (ii) $y = -x + 2$

(iii) $y = \sqrt{3}x - 1$ (iv) $= \frac{x}{\sqrt{3}} + 5$

(v) $y = -\sqrt{3}x +$ (vi) $12y = 5x - 24$

2. $(1, 2)$ என்ற புள்ளிவழிச் செல்லும் ஒரு நேர்கோடு $3x + 4y - 15 = 0$ என்ற நேர்கோட்டை புள்ளியிலிருந்து $5\sqrt{2}_7$ அலகு தூரத்தில் வெட்டுகிறது. கோட்டின் சாய்வு என்ன?

### இரண்டு நேர்கோடுகள்

3.8 **இணை கோடுகள்: (Parallel Lines)** $(x_1\ y_1)$ என்ற புள்ளி வழியே செல்லும் $ax + by + c = 0$ என்ற சமன்பாட்டின் நேர் கோட்டிற்கு இணையாகவுள்ள நேர்கோட்டின் சமன்பாடு $ax + by = ax_1 + by_1$.

$ax + by + c = 0$ என்ற நேர்கோட்டின் சரிவு $= -\frac{a}{b}$

$\therefore$ அதற்கு இணையாகச் செல்லும் நேர்கோட்டின் சரிவு $= -\frac{a}{b}$ ஆகும். மேலும் அது $(x_1\ y_1)$ வழியே செல்லுகிறது.

$\therefore$ **$\mathbf{ax + by + c = 0}$ என்ற நேர்கோட்டிற்கு இணையாக $\mathbf{(x_1\ y_1)}$ வழியே செல்லும் நேர்கோட்டின் சமன்பாடு**

$$\mathbf{ax + by = ax_1 + by_1}$$

**மாதிரி:** $5x - y = 8$ என்ற நேர்கோட்டிற்கு இணையாக $(1, -3)$ வழியே செல்லும் இணைகோட்டின் சமன்பாடு

$$5x - y = 5(1) - (-3)$$

அதாவது $5x - y = 8$ ஆகிறது.

(இவ்வாறு இணைகோட்டின் சமன்பாட்டை உடனே எழுதப் பழகவும்)

**மாதிரி:** $(1, \frac{1}{2})$ என்ற புள்ளி வழியாகவும் $(4, 5)$, $(2, -8)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டிற்கு இணையாகவும் செல்லும் நேர்கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

A $(4, 5)$

B $(2, -8)$

$\therefore$ சரிவு ABக்கு இணையான கோட்டின் சரிவு $= \frac{13}{2}$

$\therefore$ $\frac{13}{2}$ என்ற சரிவுடன் $(1, \frac{1}{2})$ என்ற புள்ளிவழியே செல்லும் கோட்டின் சமன்பாடு $13x - 2y = 13 - 2 \times \frac{1}{2}$ அதாவது $13x - 2y = 12$.

## பயிற்சி 17

1. புள்ளிகளும், கோடுகளும் தரப்பட்டுள்ளன. அப்புள்ளி வழியே அக்கோட்டிற்கு இணையாகச் செல்லும் கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

| | புள்ளி | கோடு |
|---|---|---|
| i. | $(1, 2)$ | $3x + 4y = 8$ |
| ii. | $(-1, -2)$ | $2x - 5y = 7$ |
| iii. | $(0, 3)$ | $8x + y = 11$ |
| iv. | $(-5, -1)$ | $x + y = 7$ |
| v. | $(2, 0)$ | $8x - 4y = 7$ |
| vi. | $(2a, 2b)$ | $\frac{x}{a} + \frac{y}{b} = 1.$ |

2. $(-3, 4)$, $(5, 1)$ என்ற புள்ளிகள் வழியே செல்லும் கோட்டிற்கு இணையாகவும், $(1, -2)$ என்ற புள்ளியைத் தன்மேல் கொண்ட கோட்டின் சமன்பாட்டைக் காண்.

3. $A(-5, 2)$, $B(3, -4)$, $C(-1, -1)$ என்பவை ABC என்ற முக்கோணத்தின் முனைகள். AB என்ற பக்கத்தின் நடுப்புள்ளி வழியே BCக்கு இணையாகச் செல்லும் கோட்டின் சமன் பாட்டைக் கண்டுபிடி. இது ACயின் நடுப்புள்ளி வழியே செல்லும் என்று காட்டு.

4. $a_1 x + b_1 y + c_1 = 0$ என்ற சமன்பாட்டின் நேர்கோடும், $a_2 x + b_2 y + c_2 = 0$ என்ற சமன்பாட்டின் நேர்கோடும் இணை யெனில் குணகங்களின் தொடர்பைத் தரும் சமன்பாட்டைக் கண்டுபிடி.

**3.9 இரண்டு குத்துக் கோடுகள் :** $ax + by + c = o$ என்ற சமன்பாடு தரும் கோட்டிற்குக் குத்தாக $(x_1 y_1)$ வழியே செல்லும் கோட்டின் சமன்பாடு.

$ax + by + c = o$ என்ற கோட்டின் சரிவு $= \dfrac{-a}{b}$

$\therefore$ அதற்குக் குத்தாகவுள்ள கோட்டின் சரிவு $= \dfrac{b}{a}$

$\therefore$ $\dfrac{b}{a}$ என்ற சரிவுடன் $(x_1 y_1)$ வழியே செல்லும் கோட்டின் சமன்பாடு $bx - ay = bx_1 - ay_1$.

**குறிப்பு :** (i) $x, y$ குணகங்களை மாற்றி, குறியை மாற்றினால் சமன்பாட்டின் இடப்பக்கம் கிடைக்கிறது.

(ii) அதில் $(x, y)$க்குப் புள்ளியின் உறுப்பு எண்களைப் பிரதியிட சமன்பாட்டின் வலப்பக்கம் கிடைக்கிறது.

இவ்வாறு குத்துக் கோட்டின் சமன்பாட்டை உடனே எழுத முடியும்.

**மாதிரி :** $(1, \frac{1}{2})$ என்ற புள்ளி வழியே $(4, 5)$, $(2, -8)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டிற்குக் குத்தாக உள்ள கோட்டின் சமன்பாட்டைக் காண்க.

A $(4, 5)$
B $(2, -8)$

$\therefore$ ABயின் சரிவு $= \dfrac{13}{2}$

$\therefore$ AB க்குக் குத்தாக உள்ள கோட்டின் சரிவு $= \dfrac{-2}{13}$

∴ ABக்குக் குத்தாக $(1, \frac{1}{2})$ வழியே செல்லும் கோட்டின் சமன்பாடு $2x + 13y = 2 + 13 (\frac{1}{2})$

அதாவது $4x + 26y = 17$.

### பயிற்சி 17

1. புள்ளியும், ஒரு கோடும் தரப்பட்டுள்ளன. அப்புள்ளி வழியே அக்கோட்டிற்குக் குத்தாக அமையும் கோட்டின் சமன் பாட்டை எழுதவும்.

| | புள்ளி | கோட்டின் சமன்பாடு |
|---|---|---|
| i. | $(1, -2)$ | $2x - 3y + 4 = 0$ |
| ii. | $(3, 1)$ | $4x + 3y - 5 = 0$ |
| iii. | $(-1, 2)$ | $5x - 7y + 8 = 0$ |
| iv. | $(0, 1)$ | $x + y + 1 = 0$ |
| v. | $a\cos\alpha,\ b\sin\alpha)$ | $\frac{x\cos\alpha}{a} + \frac{y\sin\alpha}{b} = 1$ |

2. $(3, 4)$, $(-1, -2)$, $(2, -3)$ என்ற முனைகளை யுடைய முக்கோணத்தின் குத்துயரங்களின் சமன்பாடுகளைக் கண்டுபிடி.

3. P $(-1, 0)$, Q $(2, -5)$, R $(0, 4)$ என்பவை PQR என்ற முக்கோணத்தின் முனைகள். அதன் குத்துயரங்களின் சமன்பாடுகளைக் கண்டுபிடி.

4. ஒரு முக்கோணத்தின் முனைகள் முறையே $(3, -4)$, $(-3, -2)$, $(-5, 6)$. அதன் பக்கங்களின் நடுக் குத்துக் கோடுகளின் சமன்பாடுகளைக் காண்க.

5. $(-2, -3)$, $(4, 5)$, $(6, -7)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் பக்கங்களின் நடுக் குத்துக் கோடுகளின் சமன் பாடுகளைக் கண்டுபிடி.

**3.10 இரண்டு கோடுகள் வெட்டும் புள்ளி:** இரண்டு கோடு களின் சமன்பாடுகள் $ax + by + c = o$; $a'x + b'y + c' = o$ என்க.

$(x_1\ y_1)$ என்பது கோடுகள் வெட்டும் புள்ளி எனில், அது இரண்டு சமன்பாடுகளுக்கும் அடங்கிய ஒரே எண் ஜோடியாக இருக்கவேண்டும். இரு சமன்பாடுகளை விடுவிக்க, வெட்டிக் கொள்ளும் புள்ளி கிடைக்கும்.

**மாதிரி :** $x - 2y + 1 = 0$; $3x - 8y + 9 = 0$ என்ற கோடுகள் வெட்டிக்கொள்ளும் புள்ளியைக் கண்டுபிடி.

$$x - 2y + 1 = 0 \ldots\ldots (1)$$
$$3x - 8y + 9 = 0 \ldots\ldots (2)$$
$$(1) \times 3 \quad 3x - 6y + 3 = 0$$
$$\therefore -2y + 6 = 0$$
$$\therefore y = 3 \qquad \therefore x = 5$$

$\therefore$ வெட்டிக் கொள்ளும் புள்ளி $(5, 3)$

**மாதிரி :** $5x + y = 3$; $3x - y = 6$ என்ற சமன்பாடுகள் தரும் கோடுகள் வெட்டிக்கொள்ளும் புள்ளி யாது?

$$5x + y = 3 \ldots\ldots (1)$$
$$3x - y = 6 \ldots\ldots (2)$$
$$\therefore 8x = 9$$
$$\therefore x = 9/8.$$

$x$ன் மதிப்பைப் பிரதியிட $5 \times \frac{9}{8} + y = 3$

$$45 + 8y = 24$$
$$8y = -21$$
$$\therefore y = \frac{-21}{8}$$

$\therefore$ வெட்டிக்கொள்ளும் புள்ளி $\left(\frac{9}{8}, \frac{-21}{8}\right)$

**மாதிரி :** $ax + by + c = 0$; $a'x + b'y + c' = 0$ என்ற சமன்பாடுகள் வெட்டிக்கொள்ளும் புள்ளி எது?

$$ax + by + c = 0 \ldots\ldots (1)$$
$$a'x + b'y + c' = 0 \ldots\ldots (2)$$
$$(1) \times b' - (2)\, b: \quad x\,(ab' - a'b) + (cb' - c'b) = 0$$
$$\therefore x = \frac{bc' - b'c}{ab' - a'b}.$$

இதேபோல் $\qquad y = \dfrac{ca' - c'a}{ab' - a'b}.$

$$\therefore \frac{x}{bc' - b'c} = \frac{y}{ca' - c'a} = \frac{1}{ab' - a'b}.$$

**குறிப்பு:**

$bc' - b'c$ என்பதை $\begin{vmatrix} b & c \\ b' & c' \end{vmatrix}$ என எழுதலாம்

$ca' - c'a$ என்பதை $\begin{vmatrix} c & a \\ c' & a' \end{vmatrix}$ என எழுதலாம்

$ab' - a'b$ என்பதை $\begin{vmatrix} a & b \\ a' & b' \end{vmatrix}$ என எழுதலாம்

$ax + by + c = 0$; $a'x + b'y + c' = 0$ எனில்

$$\frac{x}{\begin{vmatrix} b & c \\ b' & c' \end{vmatrix}} = \frac{y}{\begin{vmatrix} c & a \\ c' & a' \end{vmatrix}} = \frac{1}{\begin{vmatrix} a & b \\ a' & b' \end{vmatrix}}$$

என்று விடையை உடனே எழுதலாம்.

**குறிப்பு:** $(ab' - a'b) = 0$ என்றால் புள்ளி திட்டவட்டமாக வருவதில்லை. அதாவது இரண்டு கோடுகளும் இணைகோடுகளாகின்றன.

மாதிரி: $7x - 8y = 3$; $8x + 5y = 11$ என்ற சமன்பாடுகள் வெட்டிக்கொள்ளும் புள்ளியைக் கண்டுபிடி.

$$7x - 8y - 3 = 0$$
$$8x + 5y - 11 = 0$$

$$\therefore \frac{x}{\underbrace{\begin{vmatrix} -8 & -3 \\ 5 & -11 \end{vmatrix}}_{88 + 15}} = \frac{y}{\underbrace{\begin{vmatrix} -3 & 7 \\ -11 & 8 \end{vmatrix}}_{-24 + 77}} = \frac{1}{\underbrace{\begin{vmatrix} 7 & -8 \\ 8 & 5 \end{vmatrix}}_{35 + 64}}$$

$$\therefore \frac{x}{103} = \frac{y}{53} = \frac{1}{99}$$

$\therefore$ வெட்டிக்கொள்ளும் புள்ளி $\left(\frac{103}{99}, \frac{53}{99}\right)$ ஆகும்.

## பயிற்சி 18

கீழே தரப்பட்டுள்ள கோடுகள் வெட்டிக்கொள்ளும் புள்ளியைக் கண்டுபிடி.

(1) $3x + 5y = 11$, $3x - y = 5$

(2) $3x + 5y = 10$, $x - 5y + 10 = 0$

(3) $x + y = 12$ (4) $2x + 7y = 16$

$2x = 3y - 1$ $\qquad$ $3x - y = 1$

(5) $4x + 3y = 7$ (6) $25x + 23y = 73$

$x + y + 2 = 0$ $\qquad$ $23x + 25y = 71$

(7) $13x - 14y = 1$ (8) $4x - 3y = 2$

$17x + 16y = -1$ $\qquad$ $5x - 6y = 1$

(9) $x + y + 2 = 0$ (10) $7x + 2y = 0$

$3x - 2y + 1 = 0$ $\qquad$ $2x + 7y = 45$

**3·11 ஒரு புள்ளி வழிக் கோடுகள் (Concurrent Lines):** பொதுவாக மூன்று புள்ளிகள் வழியே ஒரு கோடு செல்லவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆனால் அவ்வாறு மூன்றும் ஒரு புள்ளி வழியே சென்றால் அவை ஒரு புள்ளி வழிக் கோடுகள் எனப்படும். அதாவது இரண்டு கோடுகள் வெட்டும் புள்ளி மூன்றாவது கோட்டிலும் அமைகிறது.

**மாதிரி:** $2x - 3y = 7$; $3x - 4y = 13$, $8x - 11y = 33$ என்ற கோடுகள் ஒரு புள்ளி வழிக் கோடுகள் என்று காட்டு.

$$2x - 3y = 7$$

$$8x - 11y = 33$$

என்ற சமன்பாடுகளை விடுவித்தால் $x = 11$; $y = 5$ ஆகும்.

∴ இக்கோடுகள் வெட்டும்புள்ளி $(11, 5)$ இது $3x - 4y = 13$ என்ற கோட்டில் அமைகிறது. ஏனெனில்

$$3(11) - 4(5) = 13$$

∴ மூன்று கோடுகளும் ஒரு புள்ளி வழியே செல்கின்றன.

**மாதிரி:** $ax + by + c = 0$; $a'x + b'y + c' = 0$, $a''x + b''y + c'' = 0$ என்பவை புள்ளி வழியே செல்லும் கோடுகளானால், குணகங்களின் தொடர்பைத் தரும் சமன்பாட்டைக் காண்க.

$$\left.\begin{aligned} a'x + b'y + c' &= 0 \\ a''x + b''y + c'' &= 0. \end{aligned}\right\}$$ என்ற கோடுகள் வெட்டும் புள்ளியைக் காண்போம்.

$$\frac{x}{\begin{vmatrix} b' & c' \\ b'' & c'' \end{vmatrix}} = \frac{y}{\begin{vmatrix} c' & a' \\ c'' & c'' \end{vmatrix}} = \frac{1}{\begin{vmatrix} a' & b' \\ a'' & b'' \end{vmatrix}}$$

$$\therefore \frac{x}{b'c'' - b''c'} = \frac{y}{c'a'' - c''a'} = \frac{1}{a'b'' - a''b'}$$

$\therefore$ வெட்டும் புள்ளி $\left(\frac{b'c'' - b''c'}{a'b'' - a''b'}, \frac{c'a'' - c''a'}{a'b'' - a''b'}\right)$

இது முதல் கோட்டில் அமைந்தால்

$$\frac{a(b'c'' - b''c')}{(a'b'' - a''b')} + \frac{b(c'a'' - c''a')}{(a'b'' - a''b')} + c = 0$$

$\therefore$ குணகங்களின் தொடர்பு

$$a(b'c'' - b''c') + b(c'a'' - c''a') + c(a'b'' - a''b') = 0$$

**குறிப்பு:** குணகங்களைக் கீழ்க்கண்ட முறையில் எழுதி எளிதாகத் தொடர்பை எழுதலாம்.




### பயிற்சி 19

1. கீழே தரப்பட்டுள்ளவை ஒரு புள்ளி வழிக்கோடுகள் என்று காட்டு.

(i) $4x + 3y = 13$; $7x - 2y = 1$; $x - 5y = -14$

(ii) $3x - 2y = 4$ $4x + 5y = 14$ $5x + 2y = 9$

(iii) $7x + 4y = 1$; $3y - 2x = 8$; $5y = 4 - 6x$

(iv) $4x + 6y = 5$; $2x - 9y + 2 = 0$; $6x - 6y = 1$

(v) $2x - 3y + 12 = 0$; $2x - y + 8 = 0$; $4x + 5y + 2 = 0$

(vi) $3x + 4y = 13$; $2x - 7y + 1 = 0$; $5x - y - 14 = 0$

2. கீழே தரப்பட்டுள்ளவை ஒரு புள்ளி வழிக் கோடுகள் எனில் $a$ ன் மதிப்பைக் கண்டுபிடி.

(i) $3x + y - 2 = 0$; $ax + 2y - 3 = 0$; $2x - y - 3 = 0$.

(ii) $x - 6y + a = 0$; $2x + 3y + 4 = 0$; $x + 4y + 1 = 0$.

(iii) $x + 3y + 2 = 0$; $x - 2y - 3 = 0$; $ax + y - 3 = 0$.

3. $4x + 9y = 5$; $2x - 9y + 2 = 0$; $ax + by = 1$ என்பவை ஒருபுள்ளிவழிச் செல்லும் கோடுகள் எனில் $3x + 2y = 6$ என்ற கோடு $(a, b)$ என்ற புள்ளிவழியே செல்லும் என்று காட்டு.

## பலவகைக் கணக்குகள்

**மாதிரி:** $7x - y - 3 = 0$; $x + y - 5 = 0$ என்ற கோடுகள் வெட்டும் புள்ளி வழியாக (i) $3x - 4y + 8 = 0$ என்ற கோட்டிற்குக் குத்தாக இருக்கும் கோட்டின் சமன்பாடு என்ன? (ii) $(4, 3)$, $(-1, -2)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும் கோட்டிற்கு இணையாகச் செல்லும் கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

வெட்டும் புள்ளியைக் காண,

$$7x - y - 3 = 0$$

$$x + y - 5 = 0$$

$$\therefore \quad 8x - 8 = 0$$

$$\therefore \quad x = 1; \quad y = 4$$

$\therefore$ வெட்டும்புள்ளி $(1, 4)$.

(i) $3x - 4y + 8 = 0$ என்பதன் சரிவு $= \dfrac{3}{4}$

$\therefore$ அதற்குக் குத்தாக உள்ள கோட்டின் சரிவு $= -\dfrac{4}{3}$

$\therefore$ $(1, 4)$ என்ற புள்ளி வழியே $\dfrac{-4}{3}$ என்ற சரிவுடன் செல்லும் கோட்டின் சமன்பாடு $4x + 3y = 4 + 12$ அதாவது $4x + 3y = 16$.

(ii) $(4, 3)$, $(-1, -2)$ என்ற புள்ளிகளைச் சேர்க்கும்

கோட்டின் சரிவு $= \frac{5}{5} = \frac{1}{1}$.

$\therefore$ இணைகோட்டின் சரிவு $= \frac{1}{1}$

$\therefore$ $(1, 4)$ வழியே $\frac{1}{1}$ என்ற சரிவுடன் செல்லும்

கோட்டின் சமன்பாடு $x - y = 1 - 4$

அதாவது $x - y + 3 = 0$.

**மாதிரி:** ஒரு முக்கோணத்தின் முனைகள் $(-4, 2)$, $(2, 6)$, $(6, -4)$. அதன் குத்துமையத்தைக் (orthocentre) கண்டுபிடி.

A $(-4, 2)$, B $(2, 6)$, C $(6, -4)$ என்பவை முனைகள்.

$\therefore$ AD $\perp$ BC ; CF $\perp$ AB ;

AD யும், CF ம் வெட்டும்புள்ளி குத்துமையம். ஆகவே இவற்றின் சமன்பாடுகளைக் கண்டு விடுவிக்க வேண்டும்.

A $(-4, 2)$

AB யின் சரிவு $= \frac{4}{6} = \frac{2}{3}$ $\therefore$ CF ன் சரிவு $= \frac{-3}{2}$

B $(2, 6)$

சரிவு BC $= \frac{10}{-4} = \frac{-5}{2}$ $\therefore$ சரிவு AD $= \frac{2}{5}$.

C $(6, -4)$

$\therefore$ AD யின் சமன்பாடு $2x - 5y = -8 - 10$

i.e. $2x - 5y = -18$

$\therefore$ CF ன் சமன்பாடு $3x + 2y = 18 - 8$

i.e., $3x + 2y = 10$

$$3x + 2y - 10 = 0$$
$$2x - 5y + 18 = 0$$

$$\therefore \frac{x}{\begin{vmatrix} 2 & -10 \\ -5 & +18 \end{vmatrix}} = \frac{y}{\begin{vmatrix} -10 & 3 \\ +18 & 2 \end{vmatrix}} = \frac{1}{\begin{vmatrix} 3 & 2 \\ 2 & -5 \end{vmatrix}}$$

$(36 - 50)$ $(-20 - 54)$ $(-15 - 4)$

$\therefore \frac{x}{-14} = \frac{y}{-74} = \frac{1}{-19}$ $\therefore$ குத்துமையம் $\frac{14}{19}, \frac{74}{19}$ ஆகும்.

## பயிற்சி 20

1. $2x+y=-5$ ; $x=y+5$ என்ற நேர்கோடுகளின் சந்திப்பு வழியாக $2x-3y=8$ என்ற கோட்டிற்கு இணையான கோட்டையும், $5x+3y=17$ என்ற கோட்டிற்குக் குத்தாக உள்ள கோட்டையும் கண்டுபிடி.

2. $3x-y+2=0$ என்ற கோட்டிற்குக் குத்தாகவும் $2x-y+5=0$ ; $x+y+1=0$ என்ற கோடுகள் வெட்டும் புள்ளி வழியாகவும் செல்லும் கோட்டின் சமன்பாடு என்ன?

3. $x+2y+5=0$ ; $y=x+7$ என்ற கோடுகள் வெட்டும் புள்ளிவழியே $5x-2y+1=0$ என்ற கோட்டிற்கு இணையாகவும் $2x-y+5=0$ என்ற கோட்டிற்குக் குத்தாகவும் உள்ள கோட்டைக் கண்டுபிடி.

4. $3x+4y=0$ என்ற கோட்டிற்கு இணையாகவும், $x+3y=1$; $x-2y+4=0$ என்பவை வெட்டும் புள்ளிவழியாகவும் செல்லும் கோட்டின் சமன்பாடு என்ன?

5. $x+2y=7$ ; $4x-y=1$ என்ற கோடுகள் வெட்டும் புள்ளியை $(-2, 3)$ என்ற புள்ளியுடன் இணைக்கும் கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

6. $(5, -2)$ என்ற புள்ளியை, $2x-y+5=0$ ; $x+y+1=0$ என்பவை வெட்டும் புள்ளியுடன் இணைக்கும் கோட்டின் சமன்பாடு என்ன?

7. $7x-13y=2$ ; $13x-7y=-2$ என்ற கோடுகளுக்குப் பொதுவான புள்ளியை மூலப்புள்ளியுடன் சேர்க்கும் கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

8. ஒரு நாற்கரத்தின் பக்கங்கள் முறையே $3x+2y+1=0$ ; $y-x=1$ ; $x+y=3$ ; $y-2x+2=0$ மூலை விட்டங்களின் சமன் பாடுகளைக் காண்க.

9. ஒரு முக்கோணத்தின் முனைகள் $(1, -2)$, $(3, 1)$ $(-2, 3)$. அதன் குத்து மையத்தைக் கண்டுபிடி.

10. $(0, -1)$, $(18, 8)$, $(0, 12)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் குத்துமையத்தைக் கண்டுபிடி.

11. $(2, 0)$, $(-2, 2)$, $(0, -4)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் சுற்றுவட்ட மையம் (circum centre) என்ன? ஆரம் என்ன?

12. ஒரு முக்கோணத்தின் முனைகள் முறையே $(0, 0)$ $(6, 0)$ $(0, 8)$. அதன் சுற்றுவட்ட மையத்தையும், சுற்றுவட்டத்தின் ஆரத்தையும் கண்டுபிடி.

13. $(4, 3)$, $(-6, 3)$, $(2, -1)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் சுற்றுவட்ட மையத்தையும், சுற்றுவட்டத்தின் ஆரத்தையும் கண்டுபிடி.

14. ஒரு முக்கோணத்தின் பக்கங்கள் $2x - y + 3 = 0$; $3x + 2y = 10$ ; $x + y - 1 = 0$. முக்கோணத்தின் பரப்பு என்ன?

15. $2x+y-5=0$ ; $x+2y-7=0$ ; $x-y-1=0$ என்பவை ஒரு முக்கோணத்தின் பக்கங்கள் எனில் முக்கோணத்தின் பரப்பைக் கணக்கிடு.

## சோதனைத் தாள் — பகுதி 2

### 1

1. $(-1, 4)$ என்ற புள்ளி வழியே $3x + 4y + 28 = 0$ என்ற கோட்டிற்குக் குத்தாகவுள்ள கோட்டின் சமன்பாடு என்ன?

2. $3x-4y+5=0$ ; $7x-8y+5=0$ ; $4x+5y=45$ என்ற கோடுகள் ஒரு புள்ளி வழிக் கோடுகள் எனக்காட்டு.

3. $x$ அச்சுடன் $-60°$ கோணத்தில் $y$ அச்சில் 4 அலகு நீளமுள்ள துண்டை வெட்டும் நேர் கோட்டின் சமன்பாட்டை எழுது.

4. $(3, 2)$, $(-1, -1)$, $(5, -5)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் குத்துமையத்தைக் காண்க.

### 2

1. A $(-3, 4)$ என்ற புள்ளி வழியே 3, $\frac{1}{3}$ என்ற சரிவுகளையுடைய இரண்டு நேர்கோடுகளின் சமன்பாட்டை எழுது. அவை X அச்சை B, C என்ற புள்ளிகளில் வெட்டினால், முக்கோணம் ABCயின் பரப்பு என்ன?

2. $3x - 4y = 18$ ; $4x - 3y = 17$ என்ற நேர்கோடுகள் வெட்டும் புள்ளி $x^2 + y^2 = 13$ என்ற வரையில் அமைகிறது எனக்காட்டு.

3 $(2, 1)$ $(3, 1)$, $(5, 0)$ என்ற முனைகளையுடைய முக்கோணத்தின் இடைக்கோடுகளின் சமன்பாடுகளைக் கண்டுபிடி.

4. $(3, 2)$, $(-2, 3)$ என்ற புள்ளிகளிலிருந்து சமதூரத்தில் $3y - 4x + 11 = 0$ என்ற நேர்கோட்டில் அமையும் புள்ளியைக் காண்க.

### 3

1. முறையே $(-1, 2)$, $(4, 1)$, $(7, 16)$ என்ற புள்ளிகளை முனைகளாக உடைய இணைகரத்தின் நான்காவது முனையைக் கண்டுபிடி. அதன் மூலை விட்டங்களின் சமன்பாடுகளைக் காணவும்.

2. A $(0, 5)$, B $(-4, 1)$, C $(5, 2)$ என்பவை மூன்று புள்ளிகள். A வழியாக BCக்கு இணையாகவும், குத்தாகவும் உள்ள நேர்கோடுகளின் சமன்பாடுகளைக் கண்டுபிடி.

3. $ax+y=5$ ; $x+5y-3=0$; $5x-2y=12$ என்பவை ஒரு புள்ளி வழிக் கோடானுல் $a$ன் மதிப்பு என்ன?

4. $a_1 x+b_1 y+c_1=0$ ; $a_2 x+b_2 y+c_2=0$, $a_3 x+b_3 y+c_3=0$ என்பவை ஒரு முக்கோணத்தின் மூன்று பக்கங்கள். கடைசி இரு பக்கங்களும் Aயில் வெட்டுகின்றன. A வழியே செல்லும் குத்துக் கோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

# 4 வட்டம்
## (Circle)

ஒரு குறிப்பிட்ட புள்ளியிலிருந்து சமதூரத்தில் அமையும் புள்ளிகள் கொண்ட புள்ளித் தொகுதி வட்டமாகும்.

குறிப்பிட்ட புள்ளிக்கு, வட்டத்தின் மையம் என்பது பெயர். மையத்திலிருந்து புள்ளிகளின் தூரம் ஆரம் எனப்படும்.

**4·1 C (h, k) என்ற புள்ளியை மையமாகவும் r அலகு ஆரமும் உடைய வட்டத்தின் சமன்பாடு :**

P $(x, y)$ என்பது வட்டத்தில் ஒரு புள்ளி ஆகுக. C $(h, k)$ அதன் மையம்.



$$\therefore CP = r$$
$$\therefore CP^2 = r^2$$
$$\therefore (x-h)^2 + (y-k)^2 = r^2$$

இதுவே வட்டத்தின் சமன்பாடு.

**குறிப்பு :** வட்ட மையம் (O, O), [அதாவது மூலப்புள்ளி, ஆரம் $a$ அலகு எனில் வட்டத்தின் சமன்பாடு

$$x^2 + y^2 = a^2$$

### பயிற்சி 21

1. வட்டமையமும், ஆரமும் தரப்பட்டுள்ளன. சமன் பாட்டை எழுது.

| | மையம் | ஆரம் | | மையம் | ஆரம் |
|---|---|---|---|---|---|
| (i) | (3, 4) | 10 | (v) | (0, 0) | 7 |
| (ii) | (3, − 2) | 5 | (vi) | (−5, 2) | 7 |
| (iii) | (−3, −4) | 5 | (vii) | (0, − 8) | 3 |
| (iv) | (0, a) | a | (viii) | $\left(\frac{1}{2}, \frac{3}{2}\right)$ | 4 |

(ix) $\left(\frac{1}{3}, -\frac{2}{5}\right)$ ; 6

2. $2x + y = 5$ ; $3x - y = 5$ என்பவை ஒரு வட்டத்தின் இரு விட்டங்கள். வட்டம் (1, −1) என்ற புள்ளி வழியே செல்வதால் வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

[**குறிப்பு :** வெட்டும் புள்ளி மையமாகும். ஆரத்தைக் கணக்கிடு].

3. $3x + y = 2$ ; $5x - 3y = 1$ என்பவை ஒரு வட்டத்தின் விட்டங்கள். வட்டம் $\left(\frac{5}{2}, \frac{7}{2}\right)$ என்ற புள்ளி வழியே செல்கிறது. வட்டத்தின் சபன்பாடு என்ன?

4. X அச்சு, Y அச்சுக்களைத் தொட்டுக்கொண்டும், முதற் பிரிவில் அமைவதாயும் இருந்தால் 4 அலகு ஆரமுமுள்ள வட்டத்தின் சமன்பாடு என்ன?

5. $(-1, -2)$ என்ற புள்ளியை மையமாகவும், $3x - y = 2$; $9x + y = 7$ என்ற கோடுகள் வெட்டும் புள்ளி வழியாகவும் செல்லக்கூடிய வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

**4.2 வட்டத்தின் பொதுச் சமன்பாடு:** $ax + by + c = o$ என்பது பொதுவாக ஒரு நேர்கோடு என்றும், அதன் சரிவு $-\frac{a}{b}$ என்றும் முன்னர் கூறினோம். அதைப்போல் வட்டத்தின் பொதுச் சமன்பாட்டைக் கண்டுணர்வோம்.

$x^2 + y^2 + 2gx + 2fy + c = o$ என்பது வட்டத்தின் சமன்பாடு. அதன் மையம் $(-g, -f)$. ஆரம் $= \sqrt{g^2 + f^2 - c}$

P $(x_1 y_1)$ என்பது சமன்பாடு தரும் வரையில் ஒரு புள்ளி ஆகுக.

$$\therefore \quad (x_1^2 + y_1^2) + 2gx_1 + 2fy_1 + c = 0$$

$$(x_1 + g)^2 + (y_1 + f)^2 = g^2 + f^2 - c$$

$$\therefore \quad \sqrt{(x_1 + g)^2 + (y_1 + f)^2} = \sqrt{g^2 + f^2 - c}$$

ஆனால் சமன்பாட்டின் இடது பக்கத்துக் கோவை P $(x_1 y_1)$ என்ற புள்ளிக்கும், C $(-g, -f)$ என்ற புள்ளிக்கும் இடையிலுள்ள தூரத்தைத் தருகிறது.

$$\therefore \quad CP = \sqrt{g^2 + f^2 - c}$$

$\therefore$ P என்ற புள்ளி வரையில் எங்கு இருப்பினும் C $(-g, -f)$ என்ற புள்ளியிலிருந்து ஒரே தூரத்தில் இருக்கிறது. ஆகவே வரை வட்டமாகும். அதன் மையம் $(-g, -f)$ ஆரம் $\sqrt{g^2 + f^2 - c}$

**குறிப்பு:** ஆகவே $(-g, -f)$ என்ற புள்ளியை மையமாக உடைய வட்டத்தின் சமன்பாடு $x^2 + y^2 + 2gx + 2fy = K$ ஆகும். Kக்கு பல்வேறு மதிப்புக்கள் கொடுக்க $(-g, -f)$ என்ற ஒரே புள்ளியை மையமாக உடைய 'பொதுமைய வட்டங்களின்' (concentric circles) சமன்பாடுகள் கிடைக்கும். ஆனால் $g^2 + f^2 - c = o$ என்றால் ஆரம் $o$ ஆகிறது. வட்டம் புள்ளி வட்டமாகிறது. ஆதாவது $(-g, -f)$ என்ற புள்ளியையே வட்டமாகக் கருதவேண்டும். $g^2 + f^2 - c$ எதிரெண்ணானால் $\sqrt{g^2 + f^2 - c}$ பொய் எண்ணாகிறது. வட்டம் பொய் என்கிறோம்.

**குறிப்பு 2.** $(-g, -f)$ என்ற புள்ளியை மையமாகவும் $(x_1\ y_1)$ என்ற புள்ளி வழியாகவும் செல்லும் வட்டத்தின் சமன்பாடு $x^2+y^2+2gx+2fy = x_1^2+y_1^2+2gx_1+2gx_1+2fy_1$ ஏனெனில் $x^2+y^2+2gx+2fy = K$ என்க. $(x_1\ y_1)$ என்ற புள்ளி இதில் அமைவதால் $x_1^2+y_1^2+2gx_1+2fy_1 = K$.

$\therefore\ x^2+y^2+2gx+2fy = x_1^2+y_1^2+2gx_1+2fy_1$ என்பது வட்டத்தின் சமன்பாடு.

**மாதிரி:** $(-\frac{1}{3}, \frac{2}{3})$ என்ற புள்ளியை மையமாகவும் $(3, -6)$ என்ற புள்ளி வழியாகவும் செல்லும் வட்டத்தின் சமன்பாட்டை எழுது.

$$x^2+y^2+\tfrac{2}{3}x-\tfrac{4}{3}y = 3^2+(-6)^2+\tfrac{2}{3}(3)-\tfrac{4}{3}(-6)$$
$$= 9+36+2+8$$
$$= 55$$

$\therefore$ சமன்பாடு $3x^2+3y^2+2x-4y=165$

**மாதிரி:** $x^2+y^2-6x+4y-8=0$ என்ற வட்டத்துடன் பொது மையமாக $(1,-1)$ என்ற புள்ளி வழியே செல்லும் வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

[பொது மைய வட்டங்களின் சமன்பாடுகளில் $x, y$ வரும் ராசிகள் ஒன்ருக இருக்கின்றன].

பொது மைய வட்டத்தின் சமன்பாடு $x^2+y^2-6x+4y=K$
$(1,-1)$ இதில் அமைகிறது.

$\therefore\ 1+1-6-4=K$

$\therefore\ -8=K$

$\therefore$ வட்டத்தின் சமன்பாடு $x^2+y^2-6x+4y=-8$

$\therefore\ x^2+y^2-6x+4y+8=0$

**மாதிரி:** $(2,-3), (4,+5)$ என்ற புள்ளிகள் ஒரு வட்டத்தின் விட்டத்தின் முனைகள். வட்டத்தின் சமன்பாடு என்ன?

A $(2, -3)$ ; B $(4, +5)$ என்பது விட்டம்.

$\therefore$ மையம் $(3, 1)$

∴ $(3, 1)$ஐ மையமாகவும் $(2, -3)$ன் வழியாகவும் செல்லும் வட்டத்தின் சமன்பாடு

$$\begin{aligned} x^2+y^2-6x-2y &= 2^2+(-3)^2-6x^2-2x-3 \\ &= 4+9-12+6 \\ &= 7 \end{aligned}$$

∴ $x^2+y^2-6x-2y-7=0$ என்பதுதான் தேவையான சமன்பாடு.

### பயிற்சி 21

(1) கீழே கொடுக்கப்பட்டுள்ள சமன்பாடுகள் குறிக்கும் வட்டங்களின் மையங்களையும் ஆரங்களையும் எழுது.

(i) $x^2+y^2+6x+8y+21=0$

(ii) $x^2+y^2-10x+4y-7=0$

(iii) $x^2+y^2=-5x+7y-2$

(iv) $4x^2+4y^2-24x+20y-3=0$

(v) $4x^2+4y^2=20x+12y-9$

(vi) $16x^2+16y^2+16y-24x=87$

(2) வட்டத்தின் மையமும், வட்டப்பரிதியிலுள்ள புள்ளியும் தரப்பட்டுள்ளது. வட்டத்தின் சமன்பாட்டை எழுது.

மையம் : $(4,2)$ ; $(-3,4)$ $\left(-\frac{1}{2}, \frac{3}{2}\right)$, $(a, a)$, $(3,-4)$

புள்ளி : $(1,-1)$ ; $(0,-2)$, $(5,-6)$, $(0, a)$, $(0, 0)$

(3) ஒரு வட்டத்தின் சமன்பாடு $x^2+y^2-x+y=8$. இத்துடன் பொது மையமுடையதாய் $(1,-1)$ என்ற புள்ளி வழியாகச் செல்லும் வட்டத்தின் சமன்பாடு என்ன?

(4) $x^2+y^2+3x-4y+7=0$ என்ற வட்டத்துடன் பொது மையமுடையதாய் $(-1, 2)$ என்ற புள்ளி வழியே செல்லும் வட்டத்தின் சமன்பாடு என்ன?

(5) $3x-y=5$ ; $2x+3y=7$ என்பவை ஒருவட்டத்தின் விட்டங்கள். அது $(1, 1)$ வழியே செல்வதாயின் வட்டத்தின் சமன்பாடு என்ன?

(6) $2x - 3y = 7$; $5x + 4y = 6$ என்பவைகளை விட்டங்களாகக் கொண்டு $x^2 + y^2 - 2x - 2y + 1 = 0$ என்ற வட்டத்துடன் பொது மையமாக உடைய வட்டத்தின் சமன்பாட்டைக் காணவும்.

(7) $(4, 1), (-2, -5)$ என்பவைகளை விட்டமுனைகளாகவுடைய வட்டத்தின் சமன்பாடு என்ன?

(8) $A(-2, 5), B(2, -5)$ என்பதை விட்டமாகக்கொண்ட வட்டத்தின் சமன்பாடு என்ன?

(9) $(-1, -2), (4, -1)$ என்பவை ஒரு விட்டத்தின் இரு முனைகள். அவ்வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

**மாதிரி :** $(1, 0)$ $(1, 2)$, $(-3, 4)$ என்ற புள்ளிகள் வழியே செல்லும் வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி. அதன் மையம் என்ன? ஆரம் என்ன?

சமன்பாடு $x^2 + y^2 + 2gx + 2fy + c = 0$ என்க.

$(1, 0)$ அதில் இருப்பதால் $1 + 2g + c = 0 \ldots\ldots$ (1)

$(1, 2)$ அதில் இருப்பதால் $5 + 2g + 4f + c = 0 \ldots\ldots$ (2)

$(-3, 4)$ அதில் இருப்பதால் $25 - 6g + 8f + c = 0 \ldots$ (3)

(2) $-$(1) $\quad 4 + 4f = 0 \quad \therefore f = -1$

(3) $-$(2) $\quad 20 - 8g + 4f = 0$

$\therefore 8g = 16 \quad \therefore g = 2$

(1) லிருந்து $c = -5$

$\therefore g = 2$; $f = -1$; $c = -5$.

$\therefore$ சமன்பாடு $x^2 + y^2 + 4x - 2y - 5 = 0$
மையம் $(-2, 1)$
ஆரம் $= \sqrt{4 + 1 + 5} = \sqrt{10}$

**குறிப்பு :** மூன்று சமன்பாடுகளைக் கண்டுபிடித்து $g, f, c$ என்பனவற்றின் மதிப்பைக் கண்டுபிடித்தால் மூன்று புள்ளிகள் வழியே செல்லும் வட்டத்தின் சமன்பாடு கிடைக்கும்.

**மாதிரி :** ஒரு வட்டம் $(8, -8)$, $(-10, 4)$ என்ற புள்ளிகள் வழியே செல்கிறது. அதன் மையம் $2y = x + 5$ என்ற கோட்டில் அமைந்தால் வட்டத்தின் சமன்பாடு என்ன?

சமன்பாடு $x^2 + y^2 + 2gx + 2fy + c = 0$

$(8, -8)$ அதில் இருப்பதால் $64 + 64 + 16g - 16f + c = 0$.

$\therefore \quad 16g - 16f + c = 128 \ldots\ldots \qquad (1)$

இதேபோல் $(-10, 4)$ அதில் இருப்பதால்

$-20g + 8f + c = -116 \ldots\ldots \qquad (2)$

வட்டமையம் $(-g, -f)$ என்பது $2y = x + 5$ என்ற கோட்டில் அமைவதால் $-g + 2f = -5 \ldots\ldots \qquad (3)$

$(1) - (2) \qquad 36g - 24f = -12$

$\therefore \quad 3g - 2f = -1 \qquad (4)$

$(3) + (4) \qquad 2g = -6$

$\therefore \quad g = -3$

$\therefore \quad f = -4; \quad c = -144$

$\therefore$ வட்டத்தின் சமன்பாடு

$x^2 + y^2 - 6x - 8y - 144 = 0$

## பயிற்சி 22

(1) கீழே கொடுக்கப்பட்டுள்ள மூன்று புள்ளிகளின் வழியே செல்லும் வட்டத்தின் சமன்பாட்டைக் காண்க.

(i) $(0, 0), (6, 0), (0, 8)$ (ii) $(2, 3), (2, -7), (3, 0)$

(ii) $(5, 4), (-5, 4), (3, 0)$ (iv) $(0, 1), (2, 3), (-2, 5)$

(v) $(1, 0), (3, 2), (5, 2)$ (vi) $(2, 0), (4, 2), (6, -2)$

(vii) $(10, 6)$ $(-4, 4)$, $(4 \cdot 8)$.

(2) $(1, -3)$, $(1, 3)$ என்ற புள்ளிகள் வழியாகவும், $3x - 4y = 12$ என்ற கோட்டினை விட்டமாகவும் கொண்ட வட்டத்தின் சமன்பாடு என்ன?

(3) $2x + y = 0$ என்ற கோட்டில் மையத்தையுடைய தாகவும் $(3, 4)$, $(-3, -4)$ என்ற புள்ளிகள் வழியாகவும் செல்லும் வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

(4) $(1, 0), (3, 4)$ என்ற புள்ளிகள் வழியே செல்வதாயும், $5x = 4y - 5$ என்ற கோட்டில் மையத்தையுடையதாகவும் கொண்ட வட்டத்தின் சமன்பாடு என்ன?

(5) X, Y அச்சுக்களில் முறையே $8, 6$ அலகுகள் தூரமுள்ள துண்டுகளை வெட்டும்படியும், மூலப்புள்ளி வழியாக செல்லும் படியும் அமைவதான வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

(6) $(3, 4)$, $(0, 5)$, $(-3, 4)$, $(-5, 0)$ என்ற புள்ளிகள் ஒரு வட்டப்பரிதியில் அமையும் என்று காட்டு. அவ்வட்டத்தின் மையமென்ன? ஆரத்தின் நீளமென்ன? (M.U.)

(7) $(2, 1)$, $(1, 2)$, $(8, 9)$ என்ற புள்ளிகள் வழியே செல்லும் வட்டத்தின் மையத்தையும், ஆரத்தையும் கண்டுபிடி.

(8) $(1, 2)$, $(-2, -4)$, $(-1, 3)$, $(2, 0)$ என்பவை ஒரு வட்ட நாற்கரத்தின் முனைகள் என்று காட்டு. அதன் ஆரத்தையும், மையத்தையும் கணக்கிடு.

## பலவகைக் கணக்குகள்

வட்டத்தைப் பற்றிய கணக்குகளில் ஜியோமிதியில் அறிந்த சில உண்மைகளைப் பயன்படுத்த வேண்டி வரும். உதாரணமாக *(i)* ஆரம் அல்லது விட்டம் என்பது வட்டமையத்தின் வழியே செல்லும் கோடாகும். *(ii)* வட்டத்திற்கு அதன் பரிதியிலுள்ள புள்ளி வழியே வரையப்படும் தொடுகோடு, தொடுபுள்ளி வழியே வரையப்படும் ஆரத்திற்குச் செங்குத்தாக இருக்கும். இம்மாதிரி உண்மைகளைப் பயன்படுத்திச் சில கணக்குகளைப் போடுவோம்.

**மாதிரி:** $x^2 + y^2 - 5x - 3y = 0$ என்ற வட்டத்திற்கு மூலப் புள்ளி வழியே செல்லும் தொடுகோட்டின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

மூலப்புள்ளி $(0, 0)$ வட்டத்தில் அமைவதைக் காணலாம்.

வட்டமையம் $C\left(\frac{5}{2}, \frac{3}{2}\right)$

$\therefore$ சரிவு $OC = \frac{3}{5}$.

தொடுகோடு $\perp OC$. $\therefore$ தொடுகோட்டின் சரிவு $= \frac{-5}{3}$.

$\therefore$ மூலப்புள்ளி வழியே செல்லும் தொடுகோட்டின் சமன்பாடு $5x + 3y = 0$ ஆகும்.

## பயிற்சி 23

1. புள்ளியும், வட்டத்தின் சமன்பாடும் தரப்பட்டுள்ளது. புள்ளி அவ்வட்டத்தில் அமைகிறது என்று காட்டு. அப்புள்ளி வழியே அவ்வட்டத்திற்கு வரையப்படும் தொடு கோட்டின் சமன்பாட்டைக் காண்க.

i. $(-6, 5)$ ; $x^2+y^2-2x-10y+1=0$

ii. $(4, 1)$ ; $x^2+y^2-3x-7y+2=0$

iii. $(-3, -2)$ ; $x^2+y^2-5x+9y-10=0$

iv. $(-9, -7)$ ; $x^2+y^2+12x+2y-8=0$

v. $(8, -8)$ ; $x^2+y^2-10x+8y+16=0$

vi. $(0, 0)$ ; $x^2+y^2+2gx+2fy=0$

2. A $(4, 1)$ என்ற புள்ளி $x^2+y^2-3x-7y+2=0$ என்ற வட்டத்தில் அமையும் என்று காட்டு. AB என்பது விட்டமானால் Bயைக் கண்டுபிடி. B வழியே வட்டத்திற்கு வரையப்படும் தொடு கோட்டின் சமன்பாடு என்ன? [C $(\frac{3}{2}, \frac{7}{2})$ என்ற வட்டமையம் ABயின் நடுப்புள்ளி என்பதைப் பயன்படுத்தி Bயைக் கண்டுபிடி.]

3. $(-3, -2)$ என்ற புள்ளி $x^2+y^2-5x+9y+10=0$ என்ற வட்டத்தில் அமைகிறது என்று காட்டு. அப்புள்ளி வழியே செல்லும் விட்டத்தின் மறு முனையையும், அம்முனை வழியே வட்டத்திற்கு வரையப்படும் தொடுகோட்டின் சமன்பாட்டையும் கண்டுபிடி.

4. $(3, -2)$ என்பது $x^2+y^2-8x+2y+15=0$ என்ற வட்டப் பரிதியில் உள்ள புள்ளி என்று காட்டு. அதன் வழியே செல்லும் விட்டத்தின் மறுமுனையையும், அம்முனை வழியே வட்டத்திற்கு வரையப்படும் தொடு கோட்டின் சமன்பாட்டையும் கண்டுபிடி.

### 4.3 புள்ளியிலிருந்து வட்டத்திற்கு வரையப்படும் தொடு கோட்டின் நீளம்.

தொடுகோடும், தொடுபுள்ளி வழியே வரையப்பட்ட ஆரமும் ஒன்றுக்கொன்று செங்குத்து என்பதைப் பயன்படுத்தி தொடு கோட்டின் நீளத்தைக் கணக்கிடலாம்.




$P(x_1 y_1)$ என்பது ஒரு புள்ளி.

$x^2 + y^2 + 2gx + 2fy + c = 0$ என்பது வட்டம்.

PT வட்டத்திற்கு வரையப்படும் தொடுகோடு.

வட்டமையம் C என்பது $(-g, -f)$ என்ற புள்ளி.

$\therefore$ $CT \perp PT$ ; $\therefore$ ஆரம் $CT = \sqrt{g^2 + f^2 - c}$

$\therefore$ $\angle PTC = 90$ ; $PT^2 = PC^2 - CT^2$ (படம் பார்க்கவும்) ஆனால் $P(x_1 y_1)$, $(-g, -f)$ என்ற இரு புள்ளிகளுக்கு இடையே உள்ள தூரம் $= \sqrt{(x_1+g)^2 + (y_1+f)^2}$

$$\therefore PT^2 = (x_1+g)^2 + (y_1+f)^2 - (g^2+f^2-c)$$
$$= x_1^2 + y_1^2 + 2gx_1 + 2f_1 + c$$

$\therefore$ தொடுகோட்டின் நீளம் $= \sqrt{x_1^4 + y_1^2 + 2gx_1 + 2fy_1 + c}$

**குறிப்பு:** (1) நீளத்தின் வர்க்கம் நேரெண்ணாக வரின் புள்ளி வட்டத்திற்கு வெளியே அமையும். ஏனெனில் $PC^2 - CT^2 > 0$.

(2) எதிரெண்ணாக வந்தால் புள்ளி வட்டத்தினுள் அமையும்
(3) 0 ஆக வந்தால் புள்ளி வட்டப்பரிதியில் அமையும்.

### பயிற்சி 24

1. $(-1, -2)$ என்ற புள்ளி $x^2 + y^2 - 6x - 8y = 0$ என்ற வட்டத்திற்கு வெளியே அமைகிறது என்று காட்டு. அப்புள்ளியிலிருந்து வரையப்படும் தொடுகோட்டின் நீளத்தைக் கணக்கிடு.

2. $x^2+y^2=16$ என்ற வட்டத்திற்கு $(-2, 1), (4, 3), (3, 2)$ என்ற புள்ளிகளில் எவை வெளியே அமைபவை? எவை உள்ளே அமைபவை?

3. $(0, 0), (3, 4), (-1, -1), (4-2)$ என்ற புள்ளிகளில் எவையெவை வட்டத்தினுள் அமையும்? அவற்றிலிருந்து வட்டத்திற்கு வரையப்படும் தொடுகோடுகளின் நீளங்களைக் கணக்கிடு.

4. $x^2+y^2-6x-8y=0$, $x^2+y^2+6x+8y+16=0$ என்ற இரு வட்டங்களுக்கும் ஒரு புள்ளியிலிருந்து வரையப்படும் தொடுகோடுகளின் நீளங்கள் சமமானுல் அப்புள்ளி $3x+4y=0$ என்ற கோட்டில் அமையும் என்று காட்டு.

3.4 **தொடுவட்டங்கள் :** இரு வட்டங்கள் ஒன்றையொன்று வெளியில் தொட்டுக்கொண்டால், அவைகளின் மையங்களுக்கிடையே உள்ள தூரம், அவைகளின் ஆரங்களின் கூடுதல் ஆகும்.

இரு வட்டங்கள் ஒன்றையொன்று உள்ளே தொட்டுக்கொண்டால், அவைகளின் மையங்களுக்கிடையே உள்ள தூரம், ஆரங்களின் வித்தியாசம் ஆகும்.

வெளித் தொர்டுவட்டங்களின் தொடு புள்ளி மையங்களுக்கிடையே உள்ள தூரத்தை உள்ளே ஆரங்களின் விகிதத்தில் பிரிக்கும்.

வெளித்தொடு வட்டங்களில் தொடு புள்ளி, மையங்களுக்கிடையேயுள்ள தூரத்தை புறம்பாக ஆரங்களின் விகிதத்தில் பிரிக்கும்.

இவ்வுண்மைகளைப் பயன்படுத்திச் சில கணக்குகளைச் செய்வோம்.

**மாதிரி :** $x^2+y^2-4x-6y-12=0$, $x^2+y^2+6x+18y+26=0$ என்ற வட்டங்கள் ஒன்றையொன்று தொடுகின்றன எனக் காட்டு. தொடு புள்ளியைக் கணக்கிடு.

முதல் வட்டத்தின் மையம் $A = (2, 3)$

$\therefore$ அதன் ஆரம் $a = \sqrt{4+9+12} = 5$

இரண்டாவது வட்டத்தின் மையம் $B = (-3, -9)$

$\therefore$ அதன் ஆரம் $b = \sqrt{9^2 + 81 - 26} = 8$

$\therefore$ $AB = \sqrt{5^2 + 12^2} = 13 = a + b$

$\therefore$ வட்டங்கள் வெளித் தொடுவட்டங்கள்.

$P(x_P, y_P)$ என்ற தொடுபுள்ளி ABயை 5:8 என்ற விகிதத்தில் பிரிக்கும்.

$A(2, 3)$ ; $B(-3, -9)$

விகிதம் 5:8

$$\therefore \quad x_P = \frac{-15 + 16}{13} = \frac{1}{13}$$

$$y_P = \frac{-45 + 24}{13} = \frac{-21}{13}$$

$\therefore$ $P\left(\frac{1}{13}, \frac{-21}{13}\right)$ என்பது தொடுபுள்ளி

### பயிற்சி 25

(1) $x^2+y^2 = 4$ என்ற வட்டமும் $x^2+y^2 - 8x - 6y+16=0$ என்ற வட்டமும் தொடுவட்டங்கள் என்று காட்டு. தொடுபுள்ளியைக் கண்டுபிடி.

(2) $x^2 + y^2 - 2x - 3 = 0$ என்ற வட்டமும், $x^2 + y^2 - 8x - 8y - 17 = 0$ என்ற வட்டமும் தொடுவட்டங்கள் எனக் காட்டு. தொடுபுள்ளியைக் கண்டுபிடி.

(3) $x^2 + y^2 + 4x + 6y + 12 = 0$ ; $x^2 + y^2 + 4x - 12 = 0$ என்பவை தொடுவட்டங்கள் என்று காட்டு. தொடுபுள்ளியைக் கண்டுபிடி.

3·4 **வட்டமும் நேர்கோடும்.** வட்டத்திற்கும், நேர்கோட்டிற்கும் பொதுவான புள்ளிகளின் உறுப்புக்கள் இரண்டு சமன்பாடுகளுக்கும் பொதுவானதாக இருக்கும். அந்த உறுப்புக்களைக் கண்டுபிடித்தால், நேர்கோடானது வட்டத்தை வெட்டும் புள்ளியைக் கண்டுபிடிக்கலாம்.

**மாதிரி :** $x + y = 1$ ; என்ற நேர்கோடு $x^2 + y^2 - 8x + 2y + 15 = 0$ என்ற வட்டத்தை வெட்டும் புள்ளிகளைக் கண்டுபிடி.

சமன்பாடுகள் $x + y = 1$ ... ... (1)

$x^2 + y^2 - 8x + 2y + 15 = 0$ ...... (2)

(1)லிருந்து $y = 1 - x$;. (2) இல் இதைப் பிரதியி.

$$x^2 + (1-x)^2 - 8x + 2(1-x) + 15 = 0$$

$$2x^2 - 12x + 18 = 0$$

$$x^2 - 6x + 9 = 0$$

$$\therefore \quad (x-3)^2 = 0$$

$$\therefore \quad x = 3, 3 \qquad \therefore \quad y = -2, -23$$

புள்ளிகள் இரண்டும் $(3, -2)$, $(3, -2)$ என வருவதால் வெட்டும் புள்ளிகள் இரண்டும் ஒன்றேயாகும். அதாவது நேர்கோடு வட்டத்தின் தொடுகோடாகும்.

### பயிற்சி 26

(1) கீழே கொடுக்கப்பட்டுள்ள வட்டங்களும், நேர்கோடுகளும் வெட்டும் புள்ளிகளைக் கண்டுபிடி.

(i) $x^2 + y^2 - 3x - 5y + 6 = 0$; $x - 2y + 1 = 0$

(ii) $x^2 + y^2 + 16x + 4y + 18 = 0$; $4x - 3y + 1 = 0$

(iii) $x^2 + y^2 - 3y - 7 = 0$; $x + 6y = 9$

(2) கீழே கொடுக்கப்பட்டுள்ள ஒவ்வொரு நேர்கோடும், அவற்றிற்கு எதிரில் கொடுக்கப்பட்டுள்ள வட்டத்தைத் தொடும் என்று காட்டு. தொடுபுள்ளியையும் கண்டுபிடி.

(i) $y = 2x$; $x^2 + y^2 - 6x - 2y + 5 = 0$

(ii) $x + y = 1$; $x^2 + y^2 + 2x - 8y + 15 = 0$

(iii) $2x + y = 7$; $x^2 + y^2 + 2x + 12y - 8 = 0$

## சோதனைத்தாள்

### பகுதி 3

[சென்னைப் பல்கலைக் கழக வினாத்தாள்களிலிருந்து எடுக்கப்பட்டவை]

### 1

(1) ஒரு வட்டம் $(-7, 1)$ என்ற புள்ளியை மையமாகவும், $(-4, -3)$ என்ற புள்ளி வழியாகவும் சென்றால் அவ்வட்டத்தின் சமன்பாடு என்ன? [M.U. 57 A]

(2) $(x-3)^2+(y-4)^2=25$ என்பது ஒரு வட்டத்தின் சமன்பாடு என்று எப்படி நிரூபிப்பாய்? அவ்வட்டம் மூலப்புள்ளி வழியாகச் செல்லும் என்று காட்டு. மூலப்புள்ளி வழியே செல்லும் விட்டத்தின் மறு முனையைக் கண்டுபிடி.

[ M.U. 57 S ]

(3) $(8, 7)$ என்ற புள்ளி $x^2 + y^2 - 10x - 6y + 9 = 0$ என்ற வட்டத்தில் அமையும் என்று காட்டு. அப்புள்ளி வழியாகச் செல்லும் விட்டத்தின் சமன்பாட்டையும், தொடுகோட்டின் சமன்பாட்டையும் கண்டுபிடி.

[M.U. 57 A]

(4) $(1, 2), (-2, -4), (-1, 3), (2, 0)$ என்ற புள்ளிகள் ஒரு வட்டப்பரிதியில் அமையும் என்று நிரூபி. அவ்வட்டத்தின் சமன்பாட்டையும், ஆரத்தையும் கண்டுபிடி.

[ M.U. 58 A ]

## 2

(1) $(3, -2)$ என்ற புள்ளியை மையமாகவும், 3 அலகு நீளம் ஆரமுள்ள வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி.

[ 58 A ]

(2) $(4, 1), (-2, -7)$ என்ற புள்ளிகளை விட்ட முனைகளாக வுடைய வட்டத்தின் சமன்பாட்டைக் காண்க.

[ 58 S ]

(3) $x^2 + y^2 + 3x + 7y + 2 = 0$ என்ற வட்டத்தின் மையமென்ன? ஆரமென்ன? $x + y + 5 = 0$ என்பது அவ்வட்டத்தின் விட்டம் என்று காட்டு. [ 58 S ]

(4) மையப் புள்ளி, $(6, 0)$, $(0, 8)$ என்ற புள்ளிகள் வழியே செல்லும் வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி. மூலப்புள்ளி வழியாகச் செல்லும் விட்டம், தொடுகோடு — இவைகளின் சமன்பாடுகளையும் கண்டுபிடி

(5) $(1, 4)$ என்ற புள்ளி $x^2 + y^2 + 6x - 2y - 15 = 0$ என்ற வட்டத்தில் அமைகிறது என்று காட்டு. அதன் வழியாகச் செல்லும் விட்டத்தின் மறுமுனை என்ன? அந்த முனை வழியாகச் செல்லும் தொடுகோட்டின் சமன்பாட்டையும் கண்டுபிடி.

## 3

(1) $2x^2 + 2y^2 + 6x + 8y - 3 = 0$ என்ற வட்டத்தின் மையத்தையும் ஆரத்தையும் கண்டுபிடி.

[60 A]

(2) X அச்சு, Y அச்சிலிருந்து முறையே 4, 6 அலகுகள் நீளமுள்ள துண்டுகளை உண்டாக்கியும், மூலப்புள்ளி வழியே செல்வதாகவும் உள்ள வட்டத்தின் சமன்பாடு என்ன?

[60 A]

(3) (0, 1), (2, 3), (−2, 5) என்ற புள்ளிகளின் வழியாகச் செல்லும் வட்டத்தின் சமன்பாட்டைக் கண்டுபிடி..

[61 A]

(4) (2, −5) என்ற புள்ளி $x^2 + y^2 - 5x + y - 14 = 0$ என்ற வட்டத்தில் அமைகிறது என்று காட்டு. அப்புள்ளி வழியாகச் செல்லும் தொடுகோட்டின் சமன்பாடு என்ன?

[61 S]

(5) (3, −4), (−2, 5) என்பவைகளை விட்ட முனைகளாக வுடைய வட்டத்தின் சமன்பாடு என்ன?

[63 A]

## 4

(1) $3x - 4y = 5$ என்ற கோடும், $4x^2 + 4y^2 - 16x - 12y + 21 = 0$ என்ற வட்டமும் வெட்டிக் கொள்ளும் புள்ளிகளைக் கண்டுபிடி.

(2) $x^2 + y^2 = 400$ என்ற வட்டமும், $x^2 + y^2 - 10x - 24y + 120 = 0$ என்ற வட்டமும் தொடுவட்டங்கள் என்று காட்டு. தொடு புள்ளியைக் கண்டுபிடி.

(3) (−1, −2) என்ற புள்ளி வழியாக $x^2 + y^2 + 6x + 10y - 2 = 0$ என்ற வட்டத்திற்கு வரையப்படும் மிகச் சிறிய நாணின் சமன்பாடு என்ன? அதன் நீளத்தைக் கணக்கிடு.

(4) $2x + 3y = 8$ ; $5x - y = 3$ என்பவை ஒரு வட்டத்தின் விட்டங்கள். அவ்வட்டம் (−11, 7) என்ற புள்ளி வழியே செல்கிறது எனில் அவ்வட்டத்தின் சமன்பாடு என்ன?

**பொருளாதாரம்—தொடர்ச்சி**

| எண் | நூல் | ஆசிரியர் | விலை |
|---|---|---|---|
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு - I | கீ. சீ. இராமசாமி | 6 00 |
| 15. | ,, II | ,, | 6 00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5 00 |
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு - I | மு. க. சுப்பிரமணியம் | 11 00 |
| 18. | ,, II | பி. வி. சீனிவாசன் | 6 00 |
| 19. | ,, III | ,, | 6 50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம் - I | மா. குமாரசாமி | 10 00 |
| 21. | ,, II | அர. சேஷாசலம் | 9 50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I | தே.வேலப்பன் | 10 00 |
| 23. | ,, II | ஜி. சிதம்பரம் | 8 00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10 00 |
| *25. | வாணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடையபிள்ளை | 9 50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றூண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில், வாணிபப் புரட்சி | கு. ரா. கறுப்பண்ணன் | 11 00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம் - I | ஏ. குழந்தை | 11 00 |
| 28. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 7 00 |
| *29. | வரவுசெலவுத் திட்டம் | ஆர். ரங்காச்சாரி | 6 00 |
| 30. | பன்னாட்டுப் பொருளாதாரம்-I | ஏ. குழந்தை | 7 50 |
| 31. | ,, II | கே. எஸ். இராமசாமி | 9 00 |
| 32. | பொருளாதார ஆய்வு நூல்-I | கோ. இராதாகிருஷ்ணன் | 7 75 |
| 33. | ,, II | ,, | 7 00 |
| 34. | வளர்ச்சியுறாத நாடுகளின் அரசாங்க நிதியியல் | க. வெற்றிவேல் | 4 25 |

| No. | Title | Author | Price |
|---|---|---|---|
| 35. | வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதலாக்கம் பற்றிய சிக்கல்கள் | மா. குமாரசுவாமி | 5 50 |
| 36. | 1939 முதல் இந்தியாவில் பணவீக்க விலைப் போக்குகள் | சி. சுந்தரராஜன் | 7 50 |
| 37. | பொருளாதார வளர்ச்சிபற்றிய கட்டுரைகள் | எம். கே. சுப்பிரமணியம் | 7 75 |

**வரலாறு**

| No. | Title | Author | Price |
|---|---|---|---|
| *38. | பிரிட்டன் வரலாறு - I | கி. ர. அனுமந்தன் | 10 00 |
| *39. | ,, II | ,, | 9 75 |
| *40. | ஐரோப்பிய வரலாறு - I | டி. வி. சொக்கப்பா | 4 50 |
| 41. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டு காலச் சரித்திரம் | வை, விருத்தகிரீசன் | 15 00 |
| 42. | இங்கிலாந்து வரலாறு — I | இரா. அண்ணுமலை | 13 00 |
| 43. | ,, II | பா. மாணிக்கவேலு | 13 00 |
| 44. | ,, III | என். ஜே. ராஜகோபால் | 8 00 |
| 45. | ,, IV | ,, | 8 00 |
| 46. | இங்கிலாந்தின் வரலாறு - I | க. த. திருநாவுக்கரசு | 15 00 |
| 47. | ,, II | எம். எக்ஸ். மிராண்டா | 8 00 |
| 48. | ,, III | ,, | 5 00 |
| 49. | இந்தியாவின் சிறப்பு வரலாறு - I | தி. வெ. குப்புசாமி | 7 50 |
| 50. | ,, II | ஏ. உஸ்மான் ஷெரீப் | 9 00 |
| 51. | ,, III | அ. பாண்டுரங்கன் | 11 00 |
| 52. | கிரேக்க நாட்டு வரலாறு - I | சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன் | 7 50 |
| 53. | ,, II | ,, | 7 00 |
| 54. | ,, III | பி. இராமானுஜம் தேவதாஸ் | 7 75 |

*மூலநூல் (Original Book)

**வரலாறு—தொடர்ச்சி**

| எண் | நூல் | | ஆசிரியர் | | விலை |
|---|---|---|---|---|---|
| 55. | ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு-I | ... | தி. வெ. குப்புசாமி | ... | 8 25 |
| 56. | ,, II | ... | ஏ. உஸ்மான் ஷெரீப் | ... | 7 50 |
| 57. | ,, III | ... | க. த. திருநாவுக்கரசு | ... | 10 50 |
| 58. | முகலாயப் பேரரசு-I | ... | ஏ. உஸ்மான் ஷெரீப், எம். எக்ஸ். மிராண்டா | | 7 50 |
| 59. | ,, II | ... | எம். எக்ஸ். மிராண்டா, பா. மாணிக்கவேலு | | 7 75 |

**அரசியல்**

| எண் | நூல் | | ஆசிரியர் | | விலை |
|---|---|---|---|---|---|
| *60. | இந்திய அரசியலமைப்பு | ... | வீ. கண்ணையா | ... | 4 75 |
| 61. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | ... | டி. செல்லப்பா | ... | 8 50 |
| 62. | தற்கால அரசியல் அமைப்புகள் | ... | மோ. வள்ளுவன் கிளாரன்சு | ... | 8 50 |
| 63. | பன்னாட்டு அரசியல் - I | ... | திருமதி நூர்ஜஹான் பாவா | ... | 16 00 |
| 64. | ,, II | ... | ,, | ... | 13 25 |
| 65. | பொதுத்துறை ஆட்சி இயல் - I | ... | வீ. கண்ணையா | ... | 9 00 |
| 66. | ,, II | ... | அ. ஜெகதீசன் | ... | 7 25 |
| 67. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம் - I | ... | வீ. கண்ணையா | ... | 7 50 |
| 68. | ,, II | ... | டி. செல்லப்பா | ... | 7 50 |
| 69. | இந்திய அரசியலமைப்புத் திட்டம் | ... | தி. வெ. குப்புசாமி, எஸ். சுப்பிரமணியன் | ... | 9 25 |
| 70. | இந்திய ஆட்சி அமைப்புமுறை வளர்ச்சி-I | ... | வீ. கண்ணையா | ... | 6 25 |
| *71. | மக்கள் ஆட்சி | ... | க. சந்தானம் | ... | 4 25 |
| 72. | 1919 முதல் சர்வதேச உறவுகளும் உலக அரசியலும் | ... | என். ஜே. இராஜகோபால் | ... | 7 75 |

**உளவியல்**

| எண் | நூல் | | ஆசிரியர் | | விலை |
|---|---|---|---|---|---|
| 73. | குழந்தை உளவியல் - I | ... | கி. ர. அப்புள்ளாச்சாரி | ... | 8 00 |
| 74. | ,, II | ... | ,, | ... | 7 00 |

| | | | |
|---|---|---|---|
| 75. | உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வரன் | 7 00 |
| 76. | இளையோர் உளவியல் - I | தி. இரா. அரங்கராசன் | 12 00 |
| 77. | ,, II | ,, | 9 00 |
| 78. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9 25 |
| 79. | பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | 11 00 |
| 80. | பித்தரின் உள்ளம் | ,, | 3 00 |
| *81. | குமர உள்ளம் | டாக்டர் மு. அறம் | 6 25 |

**தத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| 82. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5 50 |
| *83. | அறிவு ஆராய்ச்சி இயல் | ஆர். இராமானுஜாச்சாரி | 3 50 |
| *84. | மேலைநாட்டுத் தத்துவம் | ஆர். எஸ். தேசிகன் | 3 50 |
| 85. | அத்துவித தத்துவம் | கோ. மோ. காந்தி | 6 50 |
| 86. | ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 5 50 |
| 87. | இந்தியத் தத்துவம் | வ. அ. தேவசேனபதி, பா. நா. சண்முகசுந்தரம் | 3 50 |
| 88. | மெய்ப்பொருளியல்—ஓர் அறிமுகம்-I | சி. இராமலிங்கம் | 6 00 |

**அறவியல்**

| | | | |
|---|---|---|---|
| 89. | அறவியல்—ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8 50 |

**அளவையியல்**

| | | | |
|---|---|---|---|
| 90. | அளவை இயல்—தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2 50 |

*மூலநூல் (Original Book)

**மானிடவியல்**

| | | | |
|---|---|---|---|
| *91. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4 75 |
| 92. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5 50 |
| 93. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3 50 |

**சமூகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 94. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜே. நாராயணன் | 10 00 |

**புவியியல்**

| | | | |
|---|---|---|---|
| 95. | ஆசியா - I | கொ. சேஷ. நரசிம்மன் | 9 50 |
| 96. | ,, II | ,, | 8 75 |
| 97. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8 50 |
| *98. | தென்கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8 50 |
| *99. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8 25 |
| *100. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9 00 |
| *101. | தென் கண்டங்கள் - ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4 00 |
| *102. | ,, - ஆஃப்ரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3 25 |
| *103. | புவிப்புறவியல் - II | நா. அனந்தபத்மநாபன் | 6 00 |
| *104. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9 00 |
| *105. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6 25 |
| *106. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6 50 |
| 107. | காலநிலை இயல் - I | கொ. சேஷ. நரசிம்மன் | 10 00 |
| 108. | ,, II | ,, | 5 00 |
| 109. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11 00 |
| *110. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4 75 |
| 111. | பௌதிகப் புவியியலும் புவியமைப்பியலும் | கோ. இராமசாமி | 6 00 |

**புள்ளியியல்**

| | | | |
|---|---|---|---|
| *112. | புள்ளியியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10 00 |
| 113. | புள்ளியியல் முறைகள் - I | கோ. சண்முகசுந்தரம் | 10 00 |
| 114. | ,, II | கே. ஆர். இராஜகோபாலன் | 14 00 |
| 115. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | 6 50 |

**உயர்கணிதம்**

| | | | |
|---|---|---|---|
| *116. | ஆயத்தொலை வடிவகணிதம் | டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை | 12 50 |
| *117. | வகை நுண்கணிதம் | ,, | 8 00 |
| *118. | தொகை நுண்கணிதம் | தி. கோவிந்தராசன் | 9 00 |

**விலங்கியல்**

| | | | |
|---|---|---|---|
| *119. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை, இரா. முருகேசன் | 12 00 |

**பௌதிகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 120. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10 00 |

**விஞ்ஞானம்**

| | | | |
|---|---|---|---|
| *121. | வானவெளி வெற்றி | டாக்டர் எம். ஏ. தங்கராஜ் | 6 00 |
| *122. | ரேடியோ | ,, பி. திருஞானசம்பந்தம் | 4 75 |
| *123. | எக்ஸ்-கதிர்கள் | பெ. நா. அப்புசாமி, ஜே. பி. மாணிக்கம் | 4 50 |
| *124. | பாம்புகள் | பெ. மா. அண்ணாமலை | 3 50 |
| *125. | தாவரம்—வாழ்வும் வரலாறும் | டாக்டர் கு. சீனிவாசன் | 8 00 |
| *126. | கரும்பு | கு. பெரியசாமி | 4 00 |
| *127. | தாவரங்களின் வாழ்வியல் | எஸ். சுந்தரம் | 6 50 |

*மூல நூல் (Original Book)

**மருத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| *128. | நீரிழிவு-க்ஷயரோகம் | ... டாக்டர் ஜி. வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் | ... 2 50 |
| 129. | மகப்பேறும் மாதர் நோயும் | ... டாக்டர் (குமாரி) மணிமேகலை | ... 8 25 |
| *130. | பாக்டீரியா | ... சு. சுந்தரம் | ... 2 50 |
| 131. | புற்றுநோய் | ... அ. கதிரேசன் | ... 3 50 |

**பொறியியல்**

| | | | |
|---|---|---|---|
| 132. | நீங்களே வீட்டைக் கட்டலாம் | ... கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர். சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் | ... 8 50 |

**சட்டம்**

| | | | |
|---|---|---|---|
| *133. | குற்றவியல் சட்டம் | ... எம். சண்முகசுப்பிரமணியம் | ... 10 00 |

**பொது நூல்கள்**

| | | | |
|---|---|---|---|
| 134. | மகாத்மா காந்தி | ... சரஸ்வதி தங்கையன் | ... 3 25 |
| 135. | விவசாயப் புரட்சி | ... வி. கார்த்திகேயன் | ... 8 00 |
| 136. | சேமக் கை-நூல் | ... ஆ. சுப்பிரமணியம் | ... 2 50 |
| *137. | முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் | ... எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் | ... 9 00 |
| *138. | உணவும் ஊட்டமும் | ... தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் | ... 4 50 |

**புகுமுக வகுப்புகளுக்குரியவை (P.U.C.)**

| | | | |
|---|---|---|---|
| *139. | உலக வரலாறு | ... டி. ஆர். இராமச்சந்திரன் | ... 4 00 |
| *140. | பொருளாதாரம் | ... ஜி. சிதம்பரம் | ... 3 50 |
| *141. | வணிகவியலுக்கு ஓர் அறிமுகம்-I | ... கு. ஆளுடைய பிள்ளை | ... 4 00 |
| *142. | ,, -II | ... ,, | ... 3 50 |

* மூல நூல் (Original Book)

